# செவிலித்தாய்

## இத்தாலியக்கதை

சி. சு. செல்லப்பா

61



ஜோதி நிலையம்

# சர்வதேசக் கதை மலர் 16.

இத்தாலியக்கதை.

டி.கே. ஷண்முகம்



'முத்தமிழ்க் கலா வித்துவரத்தினம்'
அமரர் அவ்வை சண்முகம் அவர்கள் நினைவாக
மதுரை காமராஜ் பல்கலைக் கழகத்துக்கு
அன்புடன் அளிக்கப்பட்டது.

**27-1-1979**

விலை அணா பன்னிரண்டு.

ஜோதி வெளியீடு
சர்வதேசக் கதை மலர் 16.
முதற் பதிப்பு 1946.





விலை 0—12—0.




விரைவில் வெளிவரும்
தாய்
இத்தாலிய நாவல்.
தி. ஜானகிராமன்
மொழிபெயர்த்தது.

# செவிலித்தாய்

இத்தாலியக் கதை

ஆசிரியர்

லூயிஜி பிராண்டல்லோ






மொழி பெயர்ப்பு

சி. சு. செல்லப்பா



ஜோதி நிலையம்

திருவல்லிக்கேணி, சென்னை.

# முன்னுரை

லூயிஜி பிராண்டல்லோ இத்தாலிய தேசத்து பிரபல ஆசிரியர்களில் முக்கியமானவர். அவருடைய நாடகங்கள் ரொம்பபிரிசித்த மானவை. நாடகங்களில் 'பிராண்டேலியன்' பாணி என்ற ஒரு தனி முறையையே அவர் வகுத்துகொண்டவர்.

அவருடைய பாணியைப் பின்பற்றி பலர் நாவல் எழுதியுள்ளார்கள். அவருடைய நாடகங்களுக்கும் சிறுகதைகளுக்கும் மிகுந்த வித்யாசம் உண்டு.

அவருடைய கதைகள் யாவும் மனோதத்துவத்தையும் வாழ்வின் ஏக்கத்தையும் அடிப்படையாகக் கொண்டவை. அவருடைய கதைகள் கதாபாத்திரங்கள் யாவும் ரோம், சிசிலி, ஜனங்களைப்பற்றியது தான். அவருடைய கதைகள் யாவும் ஆழ்ந்த ஹாஸ்யமும், கேலியும் ஆத்ம விசாசரமும், நிறைந்ததை. அநேகமாக கதைகள் யாவும் துன்பகரமாக முடிகின்றன.

இதற்குக் காரணம் அவரே கூறுகிறார்:—"என்னுடைய கதைகள் துன்பகரமான முடிவுடையதாக இருக்கிறதென்றால் அதற்குக் காரணம் நான் எங்கும் துன்பத்தையே காண்பது தான்"

பிராண்டல்லோவின் கதை முதல் முதல் அசல் மொழி பெயர்ப்பாக தமிழில் இப்பொழுது தான் வருகிறது. தமிழ் மக்கள் இதை வரவேற்பார்கள் என்பதில் சந்தேகம் இல்லை.

# செவிலித்தாய்

வேலைக்காரியின் கையிலிருந்த கடிதத்தை வெடுக்கென்று பிடுங்கிக்கொண்டு, "கடைசியில் ஒருவாறு வந்து சேர்ந்தது!" என்று கத்தினாள் ஸிஞோரா மான்பிரோனி. ரோமிலிருந்து வந்த கடிதம் அது. அதைத்தான் அவள் ஆவலுடன் எதிர்பார்த்துக்கொண்டிருந்தாள். அவளுடைய மகள் எர்சீலியா சமீபத்தில் பிரசவித்தாள், தான் வாக்களித்திருந்தபடி அதைப்பற்றி விவரமாகக் கடிதம் எழுதியிருந்தான் அவளுடைய மருமகன் என்ளியோ மோரி.

அவசர அவசரமாகக் கண்ணாடியை எடுத்துப் போட்டுக்கொண்டு படிக்க ஆரம்பித்தாள்,

அவளுக்கு சுகப்பிரசவமில்லையென்றும் ஆனால் உயிருக்கு ஆபத்தில்லையென்றும் ஏற்கனவே மருமகனிடமிருந்து தந்தி-வந்திருந்தது. இந்தக் கடிதத்தில் எர்சீலியா ஆபத்தான நிலையிலிருந்ததாகவும், ரண வைத்தியரைக் கூப்பிடவேண்டியிருந்ததென்றும் தெரிவித்திருந்தான். அத்துடன் நல்லதோ கெட்டதோ விஷயம் ஒருவாறு முடிந்துவிட்டது. உங்கள் மனத்தை வேதனைக்குள்ளாக்க வேண்டுமென்று நான் இதை எழுதவில்லை என்று முடித்துவிட்டு

மனைவியின் பிடிவாதத்தைப்பற்றியும் இரண்டொரு புகார்கள் கூறியிருந்தான். அதாவது தான் ரொம்பப் புத்தி சொல்லியுங்கூட, பிரசவகாலம் வரை அவள் பிடிப்பான அங்கியையும், குதி உயர்ந்த பூட்ஸுகள் அணிவதையும் விடவில்லை என்பதுதான்.

"உயர்ந்த குதியுள்ள பூட்ஸ்கள். எப்படிப்பட்ட முட்டாள் இவன்!"

ஸிஞேரா மான்பிரோனி கடிதத்தைப் படிக்கும் போதே அடிக்கடி முட்டாள், முட்டாள் என்று முணு முணுத்துக்கொண்டே இருந்தாள். திடீரென்று கடிதம் படிப்பதை நிறுத்திவிட்டு, தன் ஆத்திரத்தை யாரிடமாவது முறையிடவேண்டுமென்று சுற்று முற்றும் பார்த்தாள்.

"என்ன; என்ன அது; செவிலித்தாய் ரோம் வாசியாக இருக்கக்கூடாதா; ஏன் கூடாது ஸீனர் மோரி? ரோமன் செவிலித்தாய்மார்கள் சம்பளம் அதிகம் கேட்பார்கள். அதுதானே. ஆகவே நாம் சிக்கனம் பிடிக்கப் புறப்பட்டிருக்கிறோம். இல்லையா; ஒரு அபேதவாத வக்கீல் இவ்வளவு தூரம் செலவு செய்ய, போதுமான சீதனம் எர்சீலியா கொண்டு போகவில்லை. அப்புறம்; ஸிஸிலியிருந்து ஒரு பட்டிக் காட்டுப் பெண்ணுடன் வண்டியிலமர்ந்து ரோம் நகருக்கு எர்சீலியா வரும்போது ரொம்ப அழகாய்த் தானிருக்கும்! செவிலித்தாய் உடைகளை எப்படி அணிந்துகொள்வது என்பதை அவள் கேள்விப்

பட்டுக்கூட இருக்கமாட்டாளே! ஆறுதரம் சோப்புப் போட்டுக் குளித்தாலும் அவள் உடல் அழுக்குப் போகாதே!

"முட்டாள். முட்டாள். முட்டாள்!"

"ஹலோ! இன்று தின்பதற்கு ஒன்றும் இல்லையா? மேஜை மீது இன்னும் ஒன்றையும் காணோமே?" என்று ஸீனர் மான்பிரோஸி வழக்கம் போல, குறை கூறிக்கொண்டே உள்ளே நுழைந் தார். வரும்போதே பணிப் பெண்ணையும், சமையல் காரனையும் வைத்துவிட்டுத்தான் உள்ளே வந்தார்.

"ஸாவரியோ! ரொம்ப சரி. ஆத்திரப்படாதே. உங்களுக்குத்தான் வீட்டுத் தொல்லைகள் எத்தனையோ இருக்கின்றனவே. எல்லாம்தான் உனக்குத் தெரியுமே?"

"எத்தனையோ வேலைகளா? உங்களுக்கா? எனக்கு ஒன்றும் இல்லையா?"

"இருக்கட்டும். இதோ சற்று உன் அருமை மருமகனிடமிருந்து வந்திருக்கும் இந்த அழகான கடிதத்தைப் படித்துக்கொண்டிரு!"

"என்ன எர்சிலியாவைப்பற்றியா?"

"நீ படித்துப்பார்"

ஸீனர் மான்பிரோஸி சாந்தமடைந்தார். கடிதத் தைப் பார்த்துவிட்டு அதைப் படித்துக்கொண்டே,

"பேஷாப் போச்சு! நமக்கு வேண்டிய அதே செவிலித்தாய் கைவசமிருக்கிருள்" என்ருர்.

ஸீனர் மான்பிரோனிக்கு இதுமாதிரி உத்வேகங்கள் அடிக்கடி வருவதுண்டு. அவற்றின் சாதுர்யத்தைக் கண்டு அவரே முதலில் பிரமித்துப்போய் விடுவார். தான் வியாபாரத்தில் நிறையப் பணம் திரட்ட இந்த உத்வேகங்கள்தான் அதிர்ஷ்டமாக இருந்தன என்பது அவருடைய அபிப்பிராயம்.

சந்தேகமும் கேலியும் கலந்த குரலில் ஸிஞரோ மான்பிரானி கேட்டாள்: "அது யாரோ?"

"டிட்டா மருல்லோவின் மனைவி!"

"யாரு. அந்தக் கொலைகாரன் மனைவியா?"

"பொறுமையாயிரு!"

"அந்த ஜனத்தலைவன் மனைவியா?

"ஆத்திரப்படாதே!"

"ஒரு குற்றவாளியின் மனைவியையா?"

"நான் விவரமாகச் சொல்லுகிறேன். நீ ஒரு ஸ்திரீ. வாழ்க்கையில் உனக்கு வழி காட்ட, உன் மண்டைக்குள் மூளையை வைப்பதற்குப் பதிலாக, கடவுள் களிமண்ணை வைத்துவிட்டார். களிமண்! இதுதான் எனக்குப் பயம். போகட்டும், ஏதோ இந்த உதவாக்கரைச் சமூகத்துக்கு ஒப்ப நாமும் வாழ்க்கை நடத்துகிருேமே..."

“இந்த விஷயத்திற்கும் நமது சமூகத்திற்கும் என்ன சம்பந்தம் வந்தது?” என்று அவர் மனைவி மிக்க வியப்புடன் கேட்டாள்.

“இருக்கத்தான் இருக்கிறது” என்று” ஸீனர் ஸாவரியோ ஆத்திரத்தோடு கூறினார். “சம்பந்தம் ரொம்ப இருக்கிறது. ஏனென்றால், - அந்த வார்த்தையை எப்படிப் போடுவது; ‘இடைவிடாத’ என்று சொல்லலாமா? இல்லை, அது சரியில்லை... ஆமாம் அதே வார்த்தைதான். இடைவிடாத கடின உழைப்பின் பயனாக ஏதோ கொஞ்சம் பொருள் தேடியிருக்கும் நாம்... - சொல்வதைக் கவனித்துக் கேள், நமக்கு எதிராக நாளுக்கு நாள் இன்னும் நிச்சயமற்றதும் பயங்கரமானதுமான ஓர் எதிர் காலம் இருக்கிறது...என்ன சொல்வது புரிகிறதா?

“இல்லவே இல்லை. என்னதான் சொல்லுகிறாய்?”

“அப்போதே நான் சொல்லவில்லையா? உன் மண்டைக்குள் மூளை இல்லை, களிமண்தானிருக்கிறது என்று!”

மனைவி உட்கார்ந்திருந்த நாற்காலியின் அருகே தானும் ஒன்றை இழுத்துப்போட்டு, கோபத்தோடு உறுமிக்கொண்டே, தொப்பென்று உட்கார்ந்தார். தன் வேலைக்காரர்கள் கேட்டுவிடாதபடி, குரலைத் தணித்துப் பேச முயற்சித்துக்கொண்டே, மேலும் சொன்னார்.

“புரட்சிகரமான கருத்துக்கள் கொண்டிருந்ததற்காகத்தான் டிட்டா மருல்லோவை ரொட்டிக்கடையிலிருந்து வெளியேற்றினேன் என்பதும் உனக்குத் தெரியும்.”

“நீ பெண்ணைக் கொடுத்திருக்கும் ஸீனர் மோரியின் கருத்துக்களைப் போலத்தானே, அவைகளும்?”

“என்னை பேசவிடமாட்டாய்?” என்று கத்தினார் மான் பிரோஸி: “ஏன் அவனுக்கு என் பெண்ணைக் கொடுத்தேன்? முதலாவது, என்ஸியோ நல்ல வாலிபன். இரண்டாவது, அவன் ஒரு அபேதவாதி. என் திட்டங்களுக்கும் அந்தக் கல்யாணம் நன்ருகப் பொருந்திவந்தது. ஆகவே நான் சம்மதம் அளித்தேன். நான் வேலை கொடுக்கும் இந்தக் கூட்டத்தால் நான் ஏன் ரொம்பவும் மதிக்கப்படுகிறேன் என்பது உனக்குத் தெரியுமா? உனக்குப் புரியாது. உனக்கு மூளைக்குப்பதில் களிமண் இருப்பதின் விளை அது. ஆனல் என்ஸியோவுக்கும் இதற்கும் சம்பந்தம் இல்லை. நாம் டிட்டாமருல்லோவைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தோம். நான் ரொட்டித் தொழிற்சாலையிலிருந்து அவனை விரட்டினேன். அவனல் வேறு வேலைசெய்து சம்பாதிக்கமுடியவில்லை. அதனல் அவன் மோசமாக நடந்தான், தண்டனையடைந்தான், தீவாந்தரத்துக்கும் அனுப்பப்பட்டான். இப்போது இங்குள்ள பணக்காரர்களில் நான் ஒருவன் என்பது வாஸ்தவம். ஆனலும் எனக்கு-ஹிருதயம் என்று ஒன்று இருக்கிறதே-அதனுள்ளே ஏதோ அடித்துக்

கொண்டிருக்கிறது. ஆகவே, அவன் மனைவியை ஒரு மூன்றும் வகுப்பு டிக்கெட் வாங்கிக் கொடுத்து, என் பேரப்பிள்ளைக்குச் செவிலித்தாயாக இருக்க ரோமுக்கு அனுப்பப்போகிறேன்"

தன் அபிப்பிராயத்தை வலுப்படுத்துவதற்கு ஸீனர் மான்பிரோனிக்கு எத்தனையோ வாதங்கள் இருக்கலாம். ஆனாலும் அவர் கன்னமொன்றில் ரொம்பவும் விகாரமான மச்சம் ஒன்று இருந்தது. அவருடைய வாதங்களுக்கு முன்பு தான் விட்டுக் கொடுக்க ஏற்பட்டபோதெல்லாம் அவர் மனைவி இந்த மச்சக்குறியையே வெறுப்போடு முறைத்து, உன்னிப்பாய்ப் பார்ப்பதுண்டு. இப்போது அவள் பார்வை மச்சத்தின் மீது பதிந்துவிட்டதைக் கவனித்ததும், மான்பிரோனி விலவிலத்துப்போய் எங்கே அசம்பாவிதமாகப் பேச ஆரம்பித்துவிடுவோமோ என்ற பயத்துடன் பேச்சை நிறுத்திவிட்டார். உடனே மணியை அடித்து வேலைக்காரிக்கு உத்தரவிட்டார்: "லிஸியை உடனே இங்கே வரச் சொல்லு"

வண்டிக்காரனாகவும், கையாளாகவும் வேலை பார்த்து வந்த லிஸி வந்து சேர்ந்தான். அவனுக்கு கோட் கிடையாது. சட்டைக்கைகளைச் சுருட்டி மடக்கிவிட்டிருந்தான். எஜமான் அழைக்கும் போதெல்லாம் இளித்துக்கொண்டே வந்து நிற்பது அவன் வழக்கம். மான் முதல் தடவை சந்தித்த

போதே அலாதிப் புத்திசாலித்தனத்தை அவனிடம் கண்டுபிடித்துவிட்ட பையன் அவன்.

"டிட்டா மருல்லோவின் மனைவி வசிக்கும் இடம் உனக்குத் தெரியுமா?"

"ஆமாம் எஜமான் தெரியும்" என்று உடலை நெளித்து, தோளை உயர்த்தி, இளித்துக்கொண்டே சொன்னான் லிஸி.

"முட்டாள்! என்னடா தெரிந்துகொண்டாய்?" என்று மான்பிரோனி அவன்மேல் சீறி விழுந்தார். அந்த வாலிபனின் குணத்தை வியந்துகொண்டிருப்பதற்கான நிலையில் அவர் இப்போது இல்லை. எஜமான் தன்னைச் சிலாகித்துப் பேசியதாக எடுத்துக்கொண்டு லிஸி மறுபடியும் குழைந்துகொண்டே, "நான் போய் அவளிடம் அதைப்பற்றிச் சொல்லிவிடுகிறேன், எசமான்" என்றான்.

"அவளை உடனே இங்கு வரச்சொல்லு. அவளோடு நான் பேசவேண்டும்."

கொஞ்ச நேரத்திலேயே லிஸியின் அலாதி புத்திசாலித்தனத்துக்கு ஒரு சிறந்த உதாரணம் மான்பிரோனிக்குக் கிடைத்தது. அவரும் அவர் மனைவியும் மேஜைமீது சாப்பிட்டுக்கொண்டிருக்கும்போதே, கையில் இரண்டு மாசக் குழந்தையுடன் ஒரு பெண் விறுட்டென அந்த அறைக்குள்

கத்திக்கொண்டே வந்தாள். டிட்டா மருல்லோவின் மனைவி அன்னிச்சியாவே அவள்.

"ஐயா, தர்ம துரையே!" என்று சந்தோஷக் கண்ணீருடன் கத்தினாள், அவள். "உங்கள் கையை முத்தமிடுகிறேன்" என்று சொல்லிக்கொண்டே முழங்காலிட்டு அவர் கால்களில் விழுந்துவிட்டாள். வேலைக்காரியும், சமையல்காரனும் கதவோரம் நின்று இந்தக் காட்சியைப் பார்த்துக்கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு முன்னால் லிஸி இளித்துக்கொண்டு நின்றான்.

ஸீனர் ஸாவேரியோ மான்பிரோனியின் கண்களுக்கும் புருவங்களுக்கும் இடையே ஓர் உயிர்ப் போராட்டம் நடந்தது. திடீரென்று ஏற்பட்ட வியப்பினால் கண்கள் பூரணமாக விரிந்தன. அதேசமயம் புருவங்கள் கோபத்தினால் சுருங்கின. அந்த இளம் பெண் முத்தமிட விரும்பிய கையை விறுட்டென்று தள்ளிவிட்டு, கதவுப்பக்கம் திரும்பிக் கத்தினார்.

"போங்கள் வெளியே! எல்லோரும் போங்கள்! இல்லை. லிஸி! நீ இங்கே வா. அவளிடம் என்னடா சொன்னாய்?"

"டிட்டா வரப்போவதாக!" என்று அன்னிச்சியா மண்டியிட்டுக்கொண்டே கூவினாள்: "ஐயா! நீங்கள் அவரை விடுதலை செய்து விட்டீர்களாமே!"

மான்பிரோனி தாவி எழுந்து நாற்காலி ஒன்றையெடுத்து ஓங்கினார்:

“இருடா ராஸ்கல்! உன்னை—”

லிஸியோ ஒரு மானைப்போல் மிரண்டு பயந்தோடி விட்டான்.

“அது உண்மையில்லையா?” என்று அன்லிச்சியா எழுந்துகொண்டே, பரிதாபமாக ஸிஞேராவைப் பார்த்துக் கேட்டாள். அவளுடைய புருஷனைச் சிறையிலிருந்து விடுவிப்பது, ஸீஞர் மான்பிரோனியின் நல்லெண்ணத்தையோ அதிகாரத்தையோ பொறுத்தது அல்ல என்று அவளுக்குப் படும்படியாய் விளக்கிச் சொல்வது பெரும் பாடாயிருந்தது. அவள் புருஷனை ரொட்டித் தொழிற்சாலையிலிருந்து விலக்கி விட்டபோதிலும், அவள் தன் வீட்டில் குழந்தையாக வளர்ந்தவள், தன் மகள் எர்சீலியாவுடன் பல வருஷங்களாக விளையாட்டுத் தோழியாக இருந்தவள் என்பதற்காக, தான் எவ்வளவு சிரமப்பட்டிருக்கிறார் என்பது அவளுக்கே தெரியும் என்று எடுத்துக் காட்டினார்.

ஸீனர் மான்பிரோனி இதையெல்லாம் விளக்கிக் கொண்டிருக்கும்போது, ஸிஞேரா அந்த யுவதி ஒரு செவிலித்தாயாக எப்படித்தோற்றம் அளிப்பாள் என்பதை ஆராய்ந்து கற்பனை பண்ணிக்கொண்டிருந்தாள். அதற்குச் சாதகமாகவும் தலையை அசைத்துக் கொண்டாள்.

லிஸியை விட்டு அவளை அழைத்துவந்த காரணத்தை மான்பிரோனி விவரமாகத் தெரிவித்ததும் அவள் பிரமித்துத் திகைத்துப் போனாள்.

"என் கைக்குழந்தையை என்ன செய்வது? அதை யார் கவனித்துக்கொள்வார்கள்?" என்று குழந்தையைக் காட்டிக்கொண்டே கேட்டாள்.

குழந்தையை மார்போடு அணைத்துக்கொண்டு மீண்டும் தேம்பி அழ ஆரம்பித்தாள்:

"டிட்டா திரும்பிவரவில்லை. என் கண்ணே! அவன் வரவில்லை!"

பிறகு கண்ணீர் படிந்த முகத்தை உயர்த்தி ஸிஞேரா மான்பிரோனி பக்கம் திரும்பிச் சொன்னாள்:

"அவனுக்கு பாப்பாவைத் தெரியாது. தனது இந்தச் சிறு தேவதையை, அவன் ஒரு போதும் பார்த்ததே இல்லை."

"எர்சிலியா உனக்குக் கொடுக்கும் சம்பளத்தில் ஒரு சிறு தொகையைக் கொண்டு அவளை வளர்ப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்யலாம்" என்றார் மான்பிரோனி.

அன்னிச்சியா உடனே, "அம்மா, ஸிஞேரினா எர்சிலியாவுக்காக நான் இதை எவ்வளவு மகிழ்ச்சியுடன் செய்வேன் என்பதும் தங்களுக்குத் தெரியுமே. ஆனால் அவர்கள் இருக்குமிடம் தொலைவில் இருக்கிறதே... ரோம் நகர்!"

ஸீனர் மான்பிரோனி உடனே பதிலுக்கு கப்பலும் ரயிலும் வந்துவிட்ட அதிர்ஷ்டத்தால் இந்தக் காலத்தில் தொலையும் தூரமும் இல்லையென்றும்,

'இங்கே ஏறவேண்டியதுதான், அங்கே போய் சுலப மாக இறங்கிவிடலாம் அவ்வளவுதான்!' என்றும் சொன்னார்.

"ஆமாம். எஜமான்! நீங்கள் சொல்வது சரி. நான் விஷயம் தெரியாதவள். வழிதப்பிவிடுவேனே, என் கிராமத்தை விட்டு ஒரு அடிகூட வெளியே சென்றது கிடையாதே" என்றாள் அன்னிச்சியா.

அவள் மேலும் சொன்னாள்: "பிரபுவே! என் மாமியார் என் கூட இருக்கிறாள் என்பது தங்களுக் குத் தெரியும். அந்த ஏழைக்கிழவியை நான் எப்படி விட்டுப் போகமுடியும்? நாங்கள் இரண்டே பேர்கள் தான். என் விசேஷ கவனத்தில் அவளை விட்டுப் போயிருக்கிறான் டிட்டோ. ஐயோ! நாங்கள் என்ன கஷ்டப்படுகிறோம் என்பதுமட்டும் தங்களுக்குத் தெரிந்தால்! நானே குழந்தையைப் பார்த்துக் கொள்ளவேண்டியிருக்கிறது. அவளுக்கோ வயது எழுபது. நானே குழந்தையை வளர்க்க வீட்டு விட்டு வேலைக்குப் போகலாம் என்று பார்த்தேன், ஏனென்றால் டிட்டா திரும்பி வந்ததும் எங்கள் மணம் நடந்தபோது இருந்த அழகான வீட்டில் ஒன் றுமே இராது போய்விடும். ஏதோ ஏழைகள் வாங் கக்கூடிய மரச்சாமன்கள் தான் என்றாலும் அவை கள் வாஸ்தவமாக நல்ல சரக்குகள். இப்போது அவை எல்லாம் அவனுக்கும் இவனுக்குமாக விற்றாகி விட்டது. ஆனாலும் அந்தக் கிழவி நான் வேலைக்குப் போவதை விரும்பவில்லை. அதை கௌரவமாகக்கருது கிறாள். கேட்கமாட்டேன் என்கிறாள். இருந்தாலும்

ஸிஞேரினே எர்சீலியாவுக்காக... நான் என்ன செய்வேன் என்பதைச் சொல்லுகிறேன். இதைப் பற்றி என் மாமியாரிடம் சொல்லிப் பார்க்கிறேன்."

"ஆனல், உடனே எனக்கு தகவல் வேண்டுமே. என்ன ஆனுலும் நாளையே நீ புறப்படவேண்டி யிருக்கும்."

அன்னிச்சியா பின்னும் தயங்கினுள் "நான் பேசி உண்டு இல்லை என்று தெரிவித்து விடுகிறேன்" என்று சொல்லி விட்டுப் போய்விட்டாள்.

சமீபத்தில் இருக்கும் குடிசையில் தான் அவள் வசித்து வந்தாள். இதற்குள் லிஸி பரப்பி விட்ட அந்தச் சந்தோஷ சமாசாரம்—ஆனல் பொய்யானது —அக்கம் பக்கத்துக்குப் பெண்களிடையே பரவி விட்டது. அந்த ஒற்றையடுக்கு குடிசையில் உட்புறம் எல்லோரும் கூடி ஒரு கருப்புக் கைக்குட்டையைக் கட்டித் தாடையோடு முடிந்து தலைக்குக் கட்டிக் கொண்டிருக்கும் அந்தக் கைதியின் கிழத்தாயைச் சுற்றிக் கவிந்து கொண்டிருந்தார்கள். குளிர் காயும் கணப்பருகே கைகளை நீட்டிக்கொண்டு உட்கார்ந்திருந்தாள் அவள். ஸீனர் மான்பிரோனியின் பிரியமான குணத்தையும் பெருந்தன்மையையும் பற்றிப் பிரமாதமாக ஒவ்வொருவரும் பேசிக்கொண்டிருந்தார்கள். அந்தக் கிழவி தலையை மார்பில் புதைத்துக் கொண்டு, சம்மதம் அல்லது கசப்பு என்று அர்த்தம் புரியாமல் அடிக்கொருதரம் முனகிக்

கொண்டிருந்தாள். வெறுப்பும் சந்தேகமுமுள்ள அவள் பார்வை அந்தக் கும்பலின்மீது சென்றது.

அந்த இடத்தை அடைந்ததும் அன்னிச்சியா கூறின முதல் வார்த்தையும் உச்சரிப்பும் ஸீனர் மான் பிரோனியைப் பற்றிப் புகழ் பாடிக்கொண்டிருந்த கூட்டத்தின் வாயைச் சட்டென அடைத்துவிட்டன. அந்தக்கிழட்டு மாமியார் தலையை உயர்த்தி பக்கத்திலிருப்பவர்களை வெறுப்புடன் பார்த்தாள். மான் பிரோனியின் யோசனை தெரிவிக்கப்பட்டதுமே அவள் எழுந்து சொன்னாள்.

"நீ அவருக்கு என்ன பதில் சொன்னாய் ?"

"நான் அதை ஒப்புக்கொள்ள வேண்டியதுதான் என்று கிழவிக்குத் தெரியப்படுத்துங்களேன்" என்று அங்கிருந்த ஸ்திரீகளை கெஞ்சிக் கேட்டுக்கொள்ளும் பாவனையில் அன்னிச்சியா பார்த்தாள்.

பிறகு "அந்த விஷயத்தை உங்களிடம் தெரிவிப்பதாகச் சொல்லிவந்தேன் அம்மா !" என்று கிழவிக்கு பதில் சொன்னாள்.

"நான் அதைக் கேட்கமாட்டேன். கேட்கமாட்டேன்!" என்று அந்தக் கிழவி கோபக்குரலில் கத்தினாள்.

நானும்தான். ஆனால்..." என்று இழுத்துக் கொண்டே அன்னிச்சியா மீண்டும் ஒத்தாசைக்கு மற்றவர்களை நோக்கினாள்.

முதலில் ஒருத்தி பிறகு மற்ருெருத்தியாக குழந்தைக்கும் அவர்கள் இருவருக்கும் வசதி ஏற்படும்படியாக இருந்த அந்த சந்தர்ப்பத்தை மருமகள் நழுவ விடக்கூடாது என்று வற்புறுத்தும் நோக்கத்துடன் சில வார்த்தைகள் கூறினர்கள். கையில் குழந்தையோடுவந்திருந்த ஒருத்தி குழந்தையை மார்பில் எடுத்து விட்டுக் கொண்டிருந்தாள். அவள் திடீரெனக் கத்தினுள்.

"இதோ பாருங்கள், இங்கே! என்னிடம் இரண்டு குழந்தைகளுக்கு வேண்டிய பால் இருக்கிறது. உன் குழந்தையை நான் எடுத்துக் கொள்கிறேன். கொஞ்சம் இங்கே பாருங்கள்!"

என்று சொல்லிக்கொண்டே, குழந்தையின் வாயிலிருந்து முலைக் காம்பை எடுத்து, கையில் ஸ்தனத்தை உயர்த்திப் பிடித்துக்கொண்டு அழுத்தி அங்கிருந்தோர் முகங்களில் படும்படி சுரந்த பாலைப் பீச்கினுள். அவர்கள் எல்லோரும் பின் வாங்கி ஒருவர் பின் ஒருவராய் மறைந்து கொண்டார்கள். எல்லோரும் சிரித்துக்கொண்டே முகங்களைக் கைகளால் மறைத்துக் கொண்டார்கள்.

ஆனல் அந்தக் கிழவி அசையவில்லை. இந்த வற்புறுத்தல்களை எல்லாம் காதில் போட்டுக் கொள்ளாமல் நாட்டுப் பெண்ணைப் பார்த்துக் கத்தினுள்.

"நீ போவதானல் என் விருப்பத்திற்கு மாருகத்தான் போகிருய். உன்னைச் சபிப்பேன். அதை மனசில் வைத்துக்கொள்."

## 2

நேபிள்ஸ் நகரிலிருந்து வரும் ரயிலை எதிர்பார்த்துக் கொண்டு வக்கீல் என்னியோமோரி ரயில்வே ஸ்டேஷனில் காத்துக்கொண்டிருந்தான். உயர்ந்த தோளும் மங்கலான நிறமும் கொண்டு சற்றுக் குட்டையாகவும் ஒல்லியாகவுமிருந்தான் அவன். அடிக்கொரு தரம் பொறுமை இழந்து தன் மனம் சங்கடப் பட்டுக் கொண்டிருப்பதை வெளியிடுவது போல முணுமுணுத்துக்கொண்டிருந்தான். கறுத்து அடர்ந்த தாடியால் அநேகமாய் மறைக்கப்பட்டு பொழிவிழந்த முகத்தைத் தேய்த்துக் கொண்டாள். வெகுநேரம் மூக்கின்மேல் அணிந்து கொண்டிருப்பதற்கு எரிச்சலாயிருந்த மூக்குக் கண்ணாடியை எடுப்பதும், பத்திரிகைகளாய் புதைத்திருந்த கோட் பைகளைத் தடவிக் கொண்டிருப்பதுமாயிருந்தான்,

ஒரு ரயில்வே ஊழியனிடம் சென்று "நேபிள்ஸ் நகரிலிருந்து வரும் ரயில் எப்போது வரும் என்று சொல்ல முடியுமா ?" என்று விசாரித்தான்.

"அது இன்று நாற்பது நிமிஷம் தாமதித்துத் தான் வரும்."

"அட கடவுளே ! இந்த இத்தாலிய ரயில்வேக்கள் ! சுத்த மோசம் ! வெறும் உதவாக்கரை !"

உட்காருவதற்கு ஓர் இடம் தேடிப்பார்த்து, சுவரில் பதித்து முன்னுக்கு எடுத்துக் கட்டப்பட்டிருந்த ஒரு கடிகாரத்தின் கீழே உட்கார்ந்தான். எங்கும் ஆட்கள் இருந்தார்கள். எனவே இறங்கப்போகிற ஒரு செவிலித்தாய்க்கு, அவன் ஒரு கட்டியங் காரனாக நடிக்க வேண்டியிருந்தது. "அசங்கியமான தொழில்!"

சென்ற இரண்டு வருஷங்களாக அவன் ரோமில் வசித்து வந்த போதிலும் (அதாவது அவன் கல்யாணம் செய்துகொண்டதுமுதல்) அவன் மனைவி சிசிலித்தீவின் ஒரு கோடியிலுள்ள காட்டுமிராண்டிக் கூட்டத்திலிருந்து கிளம்பி வந்தவள் மாதிரியே இருந்தாள். வீட்டுக்கு வெளியே போகவே தெரியாது. வீட்டுச்சாமான்களை வாங்குவதற்குக்கூட தனியே போவதற்குத் தைரியம் கிடையாது; அவள் செய்யக் கூடிய ஒரே காரியம்—மாலை முதல் இரவு வரை அவள் செய்து வந்த ஒரே காரியம் — அசங்கியமான கடுங் குரலில் அவனைத்திட்டுவதும் அவனுடைய தர்க்க ஞானத்தைப்பற்றி நெஞ்சில் தைக்கும்படியாகக் குத்திக்காட்டுவதும் தான். இன்னும் அவள் அடிக்கடி முட்டாள் தனமாக, அருவருக்கத்தக்க பொறுமையும் கொண்டு—(இந்தக் குரோதம் அவன் மீது ஏற்பட்ட பிரியத்தால் அல்ல) அவனை அற்பத்தனமாக உபத்திரவப் படுத்திக்கொண்டிருந்தாள்.

கணவன் தன்னிடம் பிரியமாக இல்லை என்று அவள் நினைக்கிறாள். ஆமாம், நான் காதலிக்கும்படியாக அவள் என்ன செய்திருக்கிறாள்? அதைவிட

தன்னை வெறுக்கச்செய்து கொள்வதிலேயேதான் அவள்சந்தோஷம் அடைகிறாள் என்றுதான் தோன்று கிறது. ஓர் இன்பமொழி, ஓர் அன்புவார்த்தை!... என்றேனும் உண்டா? எப்போதும் சந்தேகத்திலேயே மூழ்கிக் கிடப்பது. எதிர்க்கட்சி பேசுவது! சின்ன புத்தி! அசமந்தம்! எப்போதும் சண்டை! நான் சொல்லுகிறேன். அவளை மணந்து கொண்டேனே; அந்த நாள் ரொம்ப 'நல்ல' நாள்! சுத்த மோசம்! மோசமான வியாபாரம்.

மூக்குக் கண்ணாடியைப் போட்டுக்கொண்டு பத் திரிகைகளிலிருந்து ஒன்றை எடுத்துப்படிக்க ஆரம்பித் தான். வீட்டில் மனைவியின் சகவாசத்தில் ஏற்படு வது போலவே பத்திரிகை படிப்பதிலும்கூட அவனு க்கு ஒரு க்ஷணநேர ஆறுதல் ஏற்படவில்லை. ஒவ் வொரு செய்தியையும் படித்து விட்டு, அவனுக்குப் பழக்கப்பட்டுப்போன 'மோசமான வியாபாரம்!' என்ற பதத்தை முணுமுணுத்துக் கொண்டேயிருந் தான். இருந்தாலும் ஒவ்வொருநாளும் அவன் படித் துக்கொண்டு தானிருந்தான். சட்டைப் பைகளில் நிரம்பியிருந்த ரோம், மிலான், நேபிள்ஸ், டூரின் பிளா ரன்ஸ் நகரத்துப் பிரதான பத்திரிகைகளைப் படித்து முடித்தாலொழிய அவனுக்குத் திருப்தி ஏற்படாது.

எனக்கு அவை மருந்து; எனக்கு பித்தநீர் தரு கிறது என்று அவன் சொல்வதுண்டு. அளவுக்கு மீறிவிட்டது என்றுகூட அவன் டாக்டர் சொல்லி இருக்கிறார். ரொம்ப ஜாஸ்தி! ஆனால் தினசரி இந்த

மாதிரி வாசிப்பதில் அவன் ஈடுபடா விட்டால் அதற்குப்பதிலாகத் தன் நேரத்தை—இத்தாலியக் குடும்ப வாழ்க்கையைப் பற்றிய ஆனந்தமான காட்சியை மனசில் கற்பித்துக்கொண்டு—அதுவும் மனைவியோடு உட்கார்ந்து இருப்பதில் செலவிட்டால், அது அவன் ஈரலுக்கு இன்னும் எவ்வளவு கெடுதலைத் தரும்? ஆகவே பத்திரிகைகளைப் படிப்பதில் நேரத்தைச் செலவிடுவதே அதை விட மேல்!...

“சரி நேபிள்ஸ் ரயில் வரப்போகிறதா, இல்லையா?”

தன் கைக்கடியாரத்தைத் திருப்பிப்பார்த்து, குழப்பமடைந்துக் குதித்து எழுந்தான். ஒரு மணி நேரத்திற்குமேல் ஆகிவிட்டது. வெளியே செல்லும் வழி இருக்கும் பிளாட்பாரத்திற்கு அவசரமாகப் போனன். அந்தச் சனியன் பிடித்த ஸ்திரீ எங்கே இருப்பாள்? கொஞ்சநேரத்திற்கு முன்னுடியே அவள் வந்திருக்க வேண்டும். வீட்டு விலாசமும் அவளுக்குத் தெரியாது. அதிர்ஷ்ட வசமாக சாமான்களைப் பரி சோதிக்கும் சுங்கவரி ஆபீஸில் அவளைக் கண்டான், தன் மூட்டையின்மேல் உட்கார்ந்து அவள் அழுது கொண்டிருந்தாள். சுங்க அதிகாரிகள் அவளைச் சமாதானப்படுத்திக் கொண்டிருந்தார்கள். அவள் குறிப்பிடும் மூர் வக்கீலைப்பற்றி தங்களுக்கு ஒன்றும் தெரியாதாகையால் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போகும்படி சொல்லிக்கொண்டிருந்தார்கள்.

“அன்னியா”

"ஆ! எஜமான்!" என்று அவன் குரலைக் கேட்டதும் குதித்தெழுந்துக் கத்தினாள் அந்த பேதைப் பெண். அவள் சந்தோஷத்தில் நடுநடுங்கி அவன் மேலேயே சாடிவிட்டாள்.

"ஐயா! எனக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை; புரியவில்லை. தாங்கள் வந்திராவிட்டால் நான் என்ன செய்திருப்பேனோ?"

"என் மாமனார் ஏன் உன்னிடம் என் வீட்டு விலாசத்தைக் கொடுத்திருக்கக் கூடாது? ஒரு துண்டு கடிதத்திலாவது?" என்று அவளைக் கேட்டான் மோரி.

"ஆனால் எனக்குப் படிக்கத் தெரியாதே" என்று அன்னிச்சியா தன் கடைசி விம்மலை அடக்க முயற்சித்துக் கொண்டு, கண்ணீரைத் துடைத்துக்கொண்டு சொன்னாள்.

"மகா மோசம்! இவ்வளவு தூரம் வரவழைத்து என் பிராணனை வாங்குவதை விட ஒரு வண்டிக்காரனிடம் விலாசத்தைக் காட்டியிருந்தால் போதுமே; எப்படியும் நான் வந்துவிட்டேன். நான் ஸ்டேஷனுக்குள்ளிருந்தேன். உன் வண்டி வந்ததைக் கவனிக்கவில்லை அவ்வளவுதான்."

வண்டியில் அவர்கள் உட்கார்ந்ததும் அவன் அவளை எச்சரித்தான்.

"இதோபார். இந்தச் சம்பவத்தைப்பற்றி என் மனைவியிடம் ஒரு வார்த்தைகூடச் சொல்லாதே. அப்

புறம் அதைப்பற்றி ஒரே அமர்க்களமாய்விடும்” இதைச் சொல்லிவிட்டு இன்னொரு பத்திரிகையை எடுத்துப்படிக்க ஆரம்பித்தான்.

வண்டியில் ஓரத்தில் ஒட்டி அன்னிச்சியா ரொம்பவும் ஒடுங்கிக் குறுகி உட்கார்ந்துகொண்டாள். எஜமானனுக்குப் பக்கத்தில், அதுவும் தனியாக, அந்த இடத்தில் உட்கார்ந்திருப்பதைப்பற்றிய நினைப்பில் அவள் மனம் கிளர்வுற்றது. ஆனால் அந்த உணர்ச்சி வெகு நேரம் நிலைத்து நிற்கவில்லை. வெகு தூரப் பிரயாணத்தினாலும், இதுவரை ஒதுங்கி நின்று தன் குறுகிய வாழ்க்கைக் குள்ளாகவே சுழன்றுகொண்டிருந்த அவளுடைய வெள்ளை மனசில் சட்டெனத் தோன்றிய விதவிதமான தோற்றங்கள் பதிந்தன. அவள் பிரமைதட்டிப் போயிருந்தாள். அவளுக்கு ஞாபகப் பிசகு கூட ஏற்பட்டது. சிந்தனு சக்தி தீக்ஷண்யப் பார்வை இவைகளைக்கூட இழந்துவிட்டாள். அவளுடைய ஒரே உணர்ச்சி தான் ஒருவாறு வந்து சேர்ந்துவிட்டோமே, பயங்கரமான கப்பல் பிரயாணம், பீதியுண்டாக்கும் ரயிலின் வேகம் இதையெல்லாம் கடந்து உயிரோடு வந்துவிட்டோமே என்பதுதான். அவள் இப்போது எங்கிருந்தாள்? வண்டிக்கு வெளியே பார்க்க முயற்சித்தாள். ஆனால் கண்கள் உறுத்தின. ஆஹா! போப்பாண்டவர் வசிக்கும் மாபெரும் நகரமான ரோமைக் கண் குளிர நன்றாகப் பார்க்கலாம். இதற்கிடையே தனக்குத் தெரிந்த ஒருவரின் அருகில் அவள் உட்கார்ந்திருந்தாள். சீக்கிரம் ஸினாரினோவைப் பார்த்து

விடுவாள் அவள். கிட்டத்தட்ட தன் சொந்த கிராமத்திலேயே இருப்பது போன்ற உணர்ச்சி ஏற்பட்டுவிடும் அவளுக்கு. அந்தக் கிழ மாமியார், வெகு தொலைவிலுள்ள தன் குழந்தை இவர்களின் உருவம் அவர்களைப்பற்றிய நினைவு அவள் மனசில் தோன்றியது. ஆனால் நீண்ட தூரம் பிரயாணத்தில் தான் பட்ட கஷ்டங்களுக்குப் பிறகு நிம்மதியாக அந்த இடைக் காலத்தைக் கழிக்கவேண்டும் என்ற உத்ஸாக நினைப்பில் அவைகளை விரட்டிவிட்டாள்.

"நேபிள்ஸ் நகரில் யாராவது உன்னைக் கப்பலிலிருந்து இறங்கி வெளியே வர உதவி செய்தார்களா?" என்று மோரி திடீரெனக் கேட்டான்.

"ஆமாம். ஒரு கண்யமான மனிதர். அடடா! அவர் எனக்காக எவ்வளவு உதவி செய்தார்? அவர் கூட தம் வணக்கத்தை உங்களுக்குத் தெரிவிக்கும் படியே எனக்கு உத்தரவிட்டார்" என்றாள் அன்னிச்சியா.

"உனக்கு உத்தரவிட்டாரா?"

"ஆமாம். எஜமான்! அவருடைய வணக்கத்தைத் தெரிவிக்கும்படி."

"அவர் உன்னை வேண்டிக்கொண்டிருக்க வேண்டும்."

ஆமாம் எஜமான். ஆனால் பெரிய பிரபுக்களில் அவர் ஒருவர்......"

அவள் பேச்சைக் கேட்டு என்ரிகோ மோரிக்கு ஆத்திரம் வந்தது. மறுபடியும் படிக்க ஆரம்பித்தான். 'மருந்து மருந்து' என்று அவன் வாய் முணுமுணுத்துக் கொண்டது.

"என்ன சொன்னீர்கள்?" என்று அன்னிச்சியா சற்றுத் தணிவான குரலில் கேட்டாள்.

"ஒன்றுமில்லை, எனக்குள் பேசிக்கொண்டேன்" என்றான்.

அன்னிச்சியா ஒன்றும் புரியாமல் கொஞ்சம் திகைத்தாள். பிறகு சொன்னாள்; "இன்னொரு ஸ்டேஷனில் சந்தித்த கனவான் ஒருவர் கூட — அவரும் என்னிடம் பிரியமாக நடந்து கொண்டார்."

"அவரும் தம் வணக்கத்தை எனக்குத் தெரிவிக்கும்படி உனக்கு உத்தரவிடவில்லையா?"

"ஆமாம் அவர் கூடத்தான்!"

மோரி பத்திரிகையை முழங்கால் மீது வைத்து விட்டு கண்ணாடியைச் சரிப்படுத்திக் கொண்டு சிரித்துக்கொண்டே கேட்டான்: "உன் கணவன்?"

"இன்னும் அங்கேயேதான்" என்று பெருமூச்செறிந்தாள் அவள். "அந்தத் தீவில்... ஆ! ரோமில் வசிக்கும் பிரபுவாகிய தாங்கள் மட்டும், அரசர் இருக்கும் இந்த..."

"சும்மாயிரு" என்று மோரி அவளை இடைமறித்தான். அரசனைப்பற்றி அவள் பிரஸ்தாபித்துவிட்டதில் தன் கட்டை விரலை மிதித்துவிட்டது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது அவனுக்கு.

"நீங்கள் மட்டும் கொஞ்சம் சொன்னால் போதும்; அவர்கள் அவரை விடுதலை செய்துவிடுவார்கள்" என்று அடக்கத்துடன் கூறினாள் அன்னிச்சியா.

"சுத்த மோசமான வேலை" என்று மோரி மறுபடியும் கத்தினான். அவனுக்கு வந்த கோபத்தில் பத்திரிகையைக் கசக்கி ஜன்னலுக்கு வெளியே எறிந்துவிட்டான். "உன் புருஷன் ஒருவனைத்தான் அந்த இடத்திற்கு அனுப்புகிறார்கள்" என்றான்.

"தனவான்களையா?" என்று நம்பிக்கையற்ற திகைப்புடன் கேட்டாள் அன்னிச்சியா. "எப்படி பெரிய மனிதர்களை அங்கே அனுப்ப முடியும்?"

"பேசாமல் இரு" என்றான் மோரி. அவளுடைய அறியாமையின் ஆழம் அவனுக்குத் தாங்கொணா அதிர்ச்சியைக் கொடுத்தது.

அடிமை உணர்ச்சி வேரூன்றிவிட்ட சிசிலித் தீவின் கீழ் வகுப்பு ஜாதியினரிடையே ஒரு புத்துயிர் கொடுப்பதற்குச் செய்யும் முயற்சி எவ்வளவு வீண் என்பதைப்பற்றிய விசாரத்தில் அவன் ஆழ்ந்து விட்டான்.

கடைசியில் வண்டி, யோரி வசித்து வந்த 'வயா லிஸ்டினு' வை அடைந்தது.

அங்கே வெள்ளை உரைபோட்ட தலையணை களுடன், சிவப்புப் போர்வைக்கு அடியிலிருந்த இரட்டைப் படுக்கையில் எர்ஸீலியா படுத்துக்கொண்டிருந்தாள். எர்ஸீலியா சமீபத்தில் பிரசவித்ததால் மெலிந்து சோபை குன்றி கறுத்துப்போயிருந்தாள்.

அன்னிச்சியா சந்தோஷம் தாளாமல் அவளைத் தழுவிக்கொள்ள ஓடினாள்.

"ஸினோரினே! என் அருமை ஸினோரினே! இதோ வந்து விட்டேன். எல்லாம் கனவு போலிருக்கிறது. நீ எப்படி இருக்கிறாய்; ரொம்பச் சிரமப் பட்டுப் போனாய் அல்லவா?...அடி பெண்ணே! பார்த்தாலே தெரிகிறதே. அடையாளம்கூடத் தெரியவில்லை... அதெல்லாம் கடவுள் இஷ்டம். பெண்களாகிய நாம் கஷ்டப்படத்தானே பிறந்திருக்கிறோம்?"

"உளறாதே" என்று கண்டித்தாள் எர்ஸீலியா: "அசட்டுப்பேச்சு. ஸ்திரீகளே எல்லோரும் இப்படித்தான். பெண்களாகிய நாம் கஷ்டப்படத்தான் பிறந்திருக்கிறோம் என்று மாறிமாறிச் சொல்வதில் என்ன சந்தோஷம் உங்களுக்கு? இந்த தோரணையில் அமிதமாய்ப் பேசிக் கொண்டிருப்பதால் எப்போதும் ஏற்படும் பலன் என்ன என்பதை நீ கவனிக்க வில்லை. ஏன்-இந்த ஆண்கள்—எஜமானர்கள்—நிஜமாக அவர்கள் இஷ்டப்படியெல்லாம் நாம் நடக்க

வேண்டும் என்று நம்ப ஆரம்பித்து விட்டார்களா? அவர்களுடைய வசதிக்காகவே நாமிருக்கிறோமாம், அவர்களுடைய சுகத்தையே நாம் எதிர் பார்க்க வேண்டுமாம். அவர்கள்தான் எஜமானர்களாம். இப்படியெல்லாம் நினைக்க ஆரம்பித்து விட்டார்கள். இல்லையா? என்ன அசம்பாவிதம்?"

என்னியோ மோரியைக் குத்திக் காட்டப்பட்ட இந்த வார்த்தைகளால் அவன் கோபத்தோடு பத்திரிகையைச் சுருட்டிக்கொண்டு, அந்த அறையை விட்டு வெளியேறினான்.

அன்னிச்சியாவுக்குக் கொஞ்சம் சங்கடமாய் விட்டது. எஜமானியைப் பார்த்துச் சொன்னாள்.

"பாவம் அவர்களுக்கும் கஷ்டங்கள் இருக்கின்றன"

"உண்ணுவதும் உறங்குவதும் குஷியாக வெளியே சென்று வருவதும் இவைதான் அவர்கள் செய்ய வேண்டியிருப்பதெல்லாம்! இதெல்லாம் கொஞ்சம் மாறினால் தேவலை என்றே எனக்குத்தோன்றுகிறது. ஆண்கள்! ஆண்கள்! ஒரு பக்ஷப்பார்வை யுள்ளவர்கள்."

"வாஸ்தவமாக அப்படித்தான். அவர்களுக்காக நாம் கஷ்டங்களை அனுபவித்து முடிந்த வரையில்..."

"இல்லை; வாழ்க்கை பூராவுமே அப்படித்தான்; அந்த வர்க்கத்தையே நான் வெறுக்கிறேன்."

அப்போது பக்கத்து அறையிலிருந்து 'தீய்ந்து

போன உலகம் பூராவுமே' என்று என்னியோ மோரி கத்துவது கேட்டது

அதையடுத்து இன்னொரு பலத்த சப்தம்.

"இதோ வந்து விட்டேன் எஜமான், எதற்குக் கூப்பிட்டீர்கள்?"

எர்சீலியா உரக்கச் சிரித்துக்கொண்டே அன்னிச்சியாவிடம் விளக்கிக் கூறினாள்.

"இங்கே ஒரு செவிட்டு வேலைக்காரி இருக்கிறாள். யாராவது பலத்துக் கத்தினால் உடனே தன்னைத்தான் கூப்பிடுவதாக நினைத்து ஓடிவந்து விடுகிறாள். மார்கரிடா! மார்கரிடா!".

ஒன்றும் புரியாமல் திகைப்புடன் செவிட்டு வேலைக்காரி கதவடியில் வந்து நின்றாள். அடுத்த அறையில் மோரி கண்களில் கோபக் கனல் வீச அவளைக் கடுமையாகக் ஏதோ சொல்லிக்கொண்டியிருந்தான்.

"மார்கரிடா! கேள். இவள்தான் செவிலித் தாய். இப்பொழுதுதான் வந்திருக்கிறாள். ஆமாம் இப்போதே அவளுக்குத் தயார் செய்யப்பட்டிருக்கும் அறையைக் காட்டு. புரிகிறதா?" என்று கேட்டாள். பிறகு அன்னிச்சியா பக்கம் திரும்பி, "போய் குளித்து விட்டுவா புகைபடிந்து கறுத்துப்போய்க்கிடக்கிறாய்" என்றாள்.

தன்னைப்பார்த்துக்கொள்ள கண்ணாடிமுன் முகத்தை நீட்டிக்கொண்டு நின்ற அன்னிச்சியா "அட கடவுளே!" என்றுகூவினாள் கைகளை உயர்த்திக்கொண்டு.

ரயில் பிரயாணத்தினுலேற்பட்ட அலங்கோலாத்தாலும், ஸ்டேஷனில் அவள் கண்ணீர் விட்டு அழுததினுலும் அவள் முகம் அழுக்கடைந்திருந்தது. ஆனல் முகம் கழுவிக் கொள்ளப் போகுமுன் ஸினேராவுக்குத் தன் பிரயாணத்தில் ஏற்பட்ட விநோத சம்பவங்களை யெல்லாம் அபிநயத்தோடு சொல்லித்தீர்த்தாள். இதை யெல்லாம் செவிட்டு வேலைக்காரி வாய் பிளந்து கேட்டுக்கொண்டிருந்தாள், கப்பல் ரயில் இரண்டின் பிரயாணத்தின் போது நடந்த சம்பவங்களை யெல்லாம் சொன்னுள். ஒரு சமயம் பிரயாணத்தின் நடுவே அவள் ஸ்தனங்களில் பால் அளவுக்கு மீறிச் சுரந்து வெடித்து விடும் போலாகி விட்டதாம். அவளோ ஒன்றும் தெரியாமல் ஒரு குழந்தையைப்போல் அழுதாளாம். அவளுடனிருந்தவர்கள் விஷயம் என்ன வென்று கேட்டும் அவளுக்கு இதைச் சொல்ல வெட்கமாயிருந்ததாம். கடைசியில் அவர்களே தெரிந்து கொண்டு விட்டார்களாம். அப்போது ஒரு வாலிபன் கீழ்ஜாதிப் பயல்!—தான் பாலைச்சாப்பிடுவதாகக் கூறி விளையாட்டாக கையை நீட்டினுனும்! அவள் கூச்சல் போட்டு ரயிலிலிருந்து விழுந்து விடுவதாகப் பயமுறுத்தினுளாம். அதிர்ஷ்ட வசமாக அவளுக்கு அருகில் இருந்த ஒரு கிழவர் அடுத்த ஸ்டேஷனில் அவளை அடுத்த வண்டிக்கு அழைத்துக்கொண்டு போனுராம். அங்கே மூன்று மாதக் குழந்தையுடன் ஒருத்தி இருந்தாளாம். மோசமான குழந்தை! முடிவில் அந்த குழந்தைக்குப் பால் கொடுத்து வேதனையிலிருந்து கொஞ்சம் கொஞ்சமாக நிவர்த்தி ஏற்பட்ட சம்பவத்தைச் சொன்னுள்.

இப்போது தான் ஒரு நகரவாசியாகிவிட்டதாகக் கருதிய எர்ஸிலியாவுக்கு இந்தப் பட்டிக்காட்டுத் தன மான குணத்தைக் காட்டும் பேச்சு பிடிக்கவில்லை. "இவ்வளவு போதும். ஓடிப்போய் குளித்துவிட்டு வா; என் அம்மா அப்பாவைப் பற்றியெல்லாம் பிறகு பேசலாம். போ!" என்றாள்.

"குழந்தை எங்கே? அவனைப்பார்க்க விட மாட்டீர்களா? ஒருதரம் பார்த்து விட்டுப்போய் விடுகி றேன்" என்று கேட்டாள் அன்லிச்சியா.

"அதோ இருக்கிறான் குழந்தை!" என்று எர்ஸிலியா தொட்டிலைச் சுட்டிக் காட்டினாள். "ஆனால் நீ உன் அழுக்குக் கையால் திரையைத் தொடக்கூடாது. மார்கரிடா! இந்தா குழந்தையை அவளுக்குக் காட்டு.!"

ஏகப்பட்ட ரிபன்கள், லேசுகள் இவைகளுக்கு மத்தியில் - தான் ரயிலில் பால் கொடுத்தாளே அதை விட மகாமோசமான ஒரு அவலக்ஷணக் குழந்தை கிடப்பதைப் பார்த்தாள். எனினும் அன்லிச்சியா சொன்னாள். "என்ன அருமையான குழந்தை! ஒரு தேவதைபோல, ஆட்டுக்குட்டி மாதிரித் தூங்குகிறது. நான் அவனை எப்படி ஆக்கிவிடுகிறேன் பாருங்கள், அம்மா! என் குழந்தையும் பிறந்தபோது இப்படித் தான் இருந்தது, சிறுசாக! இப்போ நீங்கள் பார்க்க ணுமே அவனை!"

அந்த நினைப்பில் அவள் பேச்சு முறிந்து விட்டது.

"சரி நான் போய் திரும்பிவந்து விடுகிறேன்" என்று சொல்லி வேலைக்காரியோடு அடுத்த அறைக்குச் சென்றுவிட்டாள்.

## 3

உடனேயே அந்தக் குழந்தைக்குப் பாலூட்ட ஆரம்பித்துவிட வேண்டும் என்று விரும்பினாள், அந்தச்செவிலித்தாய். வீட்டு எஜமானனுக்கும் அதே அபிப்பிராயந்தான். ஆனால் ஒவ்வொரு விஷயத்திலும் தன் புருஷன் அபிப்பிராயத்துக்கு எதிராடும் வழக்கம் கொண்ட எர்ஸீலியா அதை ஒப்புக்கொள்ளவில்லை. பாலை டாக்டர் பரிசோதித்துப் பார்த்துத்தான் ஆகவேண்டும் என்றாள்.

"டாக்டருக்கு என்ன அவசியம் இருக்கிறது? என்னைப் பார்த்தாலே எவ்வளவு நன்றாயிருக்கிறேன் என்று தெரியவில்லையா?" என்று அன்னிச்சியா புன்சிரிப்புடன் கேட்டாள்.

சந்தேகமின்றி அவள் நல்ல தேகக்கட்டும் புதுமையும் வனப்பும் பொருந்தியவளாகத்தான் இருந்தாள்.

படுக்கையிலிருந்த எர்ஸீலியா அவளைக் கோபத்துடன் பார்த்தாள். ஏனெனில் இந்த வார்த்தைகளின் அர்த்தம் தன் புருஷனின் கவனத்தை அவள் மீது திருப்பி விடுவதற்குத்தான் என்ற சந்தேகம் தோன்றியது அவளுக்கு.

"டாக்டர்! உடனே டாக்டர் வந்தாக வேண்டும்" அழுத்தமாகச் சொன்னாள் எர்ஸீலியா.

வழக்கம்போல் முனகிவிட்டு மோரி டாக்டரை அழைத்துவர வேண்டியிருந்தது.

மாலையில் டாக்டர் வருவதற்குள் மறுபடி அன்னிச்சியாவின் ஸ்தனங்களில் பால் சுரந்து, கனத்துப் போகவே அவள் ரொம்பவும் வேதனைப்பட்டுக் கொண்டிருந்தாள். குழந்தைக்கு வேண்டிய பாலில்லாத தாயிடமிருந்து, குழந்தையைப் பாலூட்டச் செய்ய முடியாததால் குழந்தையும் பசியால் கதற ஆரம்பித்தது.

டாக்டர் வந்தபோது தானும் அந்த அறையிலிருக்க விரும்பினான் என்னியோ. ஆனால் அவன் மனைவி அவனை வெளியே அனுப்பிவிட்டாள்.

"பார்ப்பதற்கு இங்கே ஒன்றும் இல்லை. இங்கே இருக்கவேண்டாம். போய் மார்கரிடாவை ஒரு கரண்டியும், டம்ளர் ஜலமும் கொண்டு வரச்சொல்லு" என்று அனுப்பிவிட்டாள்.

ஓர் அழகி! அழகி! என்று டாக்டர் சொல்லிக் கொண்டிருந்தார். தம் மனசைக் குறிப்பாக ஒன்றில் பதியச் செய்வதற்குச் சிரமப்பட்டுப் போராடிக் கொண்டிருப்பதுபோல், ஒரு வார்த்தையை மூன்று நான்கு தரம் எங்கேயோ பார்த்துக் கொண்டு உச்சரிப்பது அவருடைய வழக்கம்.

தன்னை டாக்டர் அவ்வளவு உற்றுநோக்கி ஆராய்வதை உணர்ந்த அன்னிச்சியா லஜ்ஜை யடைந்தாள். கன்னங்கள் நாணத்தால் சிவந்தன.

"ஓர் அழகி! அவளை அப்படித்தான் கூப்பிட வேண்டும். அம்மா, நீங்களும் அப்படித்தானே நினைக்கிறீர்கள்? இல்லையா. அழகிய யுவதிதான் ...அழகோடு தேகக்கட்டும்கூட... தேக திடமும்தான்...சரி நன்றாக அவளை ஒரு தரம் ஆராய்ந்து பார்க்கிறேன்"

அன்னிச்சியாவைத் தலையை உயர்த்திக்கொள்ளச் சொல்லிவிட்டு அவளுடைய கழுத்துப்பக்கமுள்ள கிரந்திகளைப் பரிசோதித்தார். பிறகு சிறிது பரிசீலனைக்குப்பிறகு, அவளுடைய மேலங்கியைக் கழற்ற ஆரம்பித்தார். இதைச்செய்யவும் அன்னிச்சியா பிரமித்துக் குழப்பம் அடைந்தாள். அவமானத்தால் நடுங்கிக் கொண்டு தன் கைகளால் மார்பைப் பொத்திக் கொண்டு அவரைத் தடுத்துவிட முயற்சித்தாள்.

"அவிழ்த்துவிடு! அவிழ்த்துவிடு!" என்றார் டாக்டர்.

எர்ஸீலியா கடகடவென்று சிரித்தாள்.

"எதற்காக அம்மா இப்படிச் சிரிக்கிறீர்கள்? ஏன்? எதற்காக?" என்று கேட்டார் டாக்டர்.

"அந்த பேதைப் பெண் எவ்வளவு அதிர்ந்து போய் விட்டாள் பாருங்கள்" என்று விளக்கினாள் எர்ஸீலியா.

"என்னைப்பார்த்தா? நான் டாக்டராச்சே!"

"அவளுக்கு இதெல்லாம் பழக்கம் இல்லை. அதோடு டாக்டர், இன்னொரு விஷயம். சிஸிலிப் பெண்கள் இந்த ஊர்ப் பெண்களைப் போலல்ல!"

"புரிகிறது, புரிகிறது. அடக்கமாக! ரொம்ப அடக்கமாக!...ஆனால் நான் டாக்டராச்சே. என்னி டம் எல்லாவற்றையும் மனம் விட்டுச் சொல்ல வேண்டும்? சரி. இங்கேவா. நீயே இந்தக் கரண் டியில் கொஞ்சம் பால் சுரந்து கொடு. உன் குழந் தைக்கு வயதென்ன?"

டாக்டர் முகத்தைச் சற்றுச் சிரமப்பட்டுப் பார்த் துக்கொண்டே, "அவனை இரண்டு மாதங்களுக்கு முன் சம்பாதித்தேன்" என்றாள்.

"சம்பாதித்தாயா? என்ன அதற்கு அர்த்தம்?"

"எப்படிச் சொல்லவேண்டும்?"

"அவனைப் பெற்றெடுத்தேன் என்று சொல்லு பெண்ணே. குழந்தைகளைச் சம்பாதிப்பதில்லை. பெறுகிறார்கள். அப்படிச் சொல்வதில் என்ன தப்பு இருக்கிறது?"

தாய்ப்பாலைச் சோதித்துவிட்டு டாக்டர் புறப் பட்டுப் போனதும், தன் சக்தியை ரொம்பவும் சோதித்துவிட்டதாக எண்ணி, அயர்வு மேலிட்டு நாற்காலியில் உட்கார்ந்தாள்.

"ஐயோ! ஸின்ரினே! என்ன மோசம்! நான் அவமானத்தால் செத்தே போய்விடுவேன் என்று நினைத்து விட்டேன்."

அடுத்த விநாடி குழந்தை அழும் சப்தம் கேட்டுத் தொட்டிலுக்கு ஓடி, அதை எடுத்து விட்டாள்.

"இதோ பார், பாப்பா. நிறையக் குடி என் அன்பே!"

மறுபடியும் படுக்கையிலிருந்த எர்ஸீலியா கோபத்தோடு பார்த்தாள். உச்சி நடுவிலிருந்து இரண்டாகபிரிந்து காதளவு ஓடிச் சுருண்டு புரண்டு கொண்டிருந்த அவளுடைய பொன்னிறமான கேசம் அவள் அழகிய உடலுக்கு அழகு சேர்ப்பதைக் கண்டாள். அவளுடைய உருண்டுதிரண்ட மார்பகத்தையும் கவனித்து எரிச்சலோடு சொன்னுள்;

"குழந்தையின் ஆடைகளை மாற்றிவிட்டு, பிறகு ஆகாரம் கொடுத்து தூங்கப் பண்ணலாமே."

"ஐயோ பாவம். குழந்தை குடிக்கட்டுமே. ஐயோ அவனுக்கு என்னபசி! அவன் என்ன ஆவலோடு உறிஞ்சுகிருன் என்பதைமட்டும் நீ உணர்ந்தால்—?" என்ருள் அன்னிச்சியா.

தாய்க்கும் குழந்தைக்கும் என்றிருந்த பக்கத்து அறைக்குக் கொஞ்சநேரம் கழித்துப் போனதும் அங்கிருந்த சாமான்களையும் அலங்காரங்களையும் பார்த்த பிரமிப்பில் அவளால் வாய்விட்டுக் கத்தாமலிருக்க முடியவில்லை.

"ஆஹா ரோமில்தான் எல்லாம் எவ்வளவு பிரமாதமாக இருக்கின்றன?"

தான் தூங்குவதற்காக அமைக்கப்பட்டிருந்த அந்த நேர்த்தியான புதிய படுக்கையைப் பார்த்ததும், அவள் மனம் கிளர்வுற்றது. அப்போது இரண்டு வருஷங்களுக்குமுன் முதன்முதலாக இதேமாதிரி நேர்த்தியான இன்னொரு படுக்கையை—அதாவது தனக்கும் தன் புருஷனுக்குமாக அமைக்கப்பட்ட அந்த சோபனப்படுக்கையைப்—பார்த்தது அவளுக்கு நினைவுக்குவந்தது. டிட்டா தன் அழிவுக்குக் காரணமான பாழுங் கருத்துக்களை ஒன்றும் மனசில் கொள்ளாமலிருந்த - அந்த நாட்களை வெகு தொலையில் இருக்கும் அந்தக் குடிசையை அந்த நாட்களில் இருந்தபடி நினைத்துக்கொண்டாள். தன் மனைவிக்காக எவ்வளவு தீவிரக் காதலோடு அதைச் சேகரித்தான், அவன். ஆனால், ஐயோ இப்போது—! தானும் தன் மாமியும் சேர்ந்து படுக்கும் ஒரே படுக்கையும், இரண்டு நாற்காலிகளையும் தவிர வேறொன்றும் இல்லாத இன்றைய நிலைமையை அவள் எண்ணி பெருமூச்செறிந்தாள்!

இப்போது அந்தக் கிழவி மட்டும் அந்த இரட்டைப் படுக்கையில் பூரணமாகப் படுத்துக்கொண்டிருப்பாள். ஏனெனில், குழந்தை அண்டை வீட்டில் தான் அநேகமாகத் தூங்கிக்கொண்டிருக்கும்.

பாவம், லிஜ்ஸிடு. தன் குழந்தை வீட்டிலும் படுக்கவில்லை. பெற்றதாயும் வெகு தொலையில் இருக்கிறாள். தன் குழந்தையைப் பார்ப்பதுபோல் அந்த ஸ்திரீ லிஜ்ஸிடுவையும் கவனிக்க மாட்டாள் என்பது

அவளுக்கு நிச்சயமாகத்தெரியும், இதுவரைக்கும் தாய்ப்பால் அவ்வளவையும் குடித்துக்கொண்டிருந்த தன் குழந்தை, இப்போது மற்றொருவளுடைய குழந்தைக்குப்போக மிஞ்சியதை எதிர்பார்த்துக்கொண்டு ஒரு பக்கம் கிடக்கும் என்ற நினைவு அவள் மனத்தகத்தே எழுந்தது,

அன்னிச்சியா அழத் தொடங்கினுள். தான் அழுவதைக் கண்டு பிடித்து விடக்கூடாதே என்ற பயத்தால் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு ஆறுதல் கொள்ள ஆரம்பித்தாள். அதாவது, குழந்தையின் பாட்டி பக்கத்தில் இருப்பதால் கவனித்துக் கொண்டே இருப்பாள். ஏதாவது நடந்து விட்டாலும்கூட: அந்த வலுத்த முரட்டுக்கிழவி தன் செல்வாக்கால் சரிப்படுத்திவிடுவாள், கிழவி டிட்டாவின் தாய், அவனைப்போலவே அவளுக்கும் நல்ல மனசு. நாளடைவில் தன் மருமகள் தன் வார்த்தையைத் தட்டிவிட்டது நிர்பந்த சங்கடத்தால்தான் என்பதை அவள் கட்டாயம் அறிந்து கொள்வாள் என்றெல்லாம் தன்னைத்தேற்றிக் கொண்டாள். அந்த அலங்கார மஞ்சத்தில் படுத்துத்தூங்குவதைவிட, தரையில் படுப்பதைத் தான் அன்னிச்சியா விரும்பியிருப்பாள். அதன் மூலம் வலிந்து பிறருடைய நலனையேதான் கவனிப்பவள் என்பதையும் அவள் நிதரிசனமாகக் காட்டிவிட முடியும். அந்தக் குழந்தைக்குத்தான் அந்தப் படுக்கை பொருத்தமானது. ஏனெனில் அதற்காகவே அவ்வளவு செலவில் அது தயாரிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே தான் மட்டும் நாயைப் போலத் தரையில்

படுத்துக்கொள்வதுதான் அவளுக்குப் பிடித்திருந்தது தன் குழந்தை லிஜ்ஸிடுவும் மாமியும் படுத்துக்கொண் டிருக்கும் வைக்கோல் அடைத்த மெத்தைகளைப் பற்றி நினைத்துக்கொண்டபோது அவளுக்கு அந்தப் படுக்கையில் படுத்துத் தூங்குவதற்கு மனசே இல்லை.

சில தினங்கள் கழித்து அவளுக்காக தைத்துவந்த படாடோபமான ஆடைகளைப்பார்த்தபோது அவள் மனம் இன்னும் புண்பட்டது. அந்தப் பூவேலை செய்த ஆடைகள், பட்டு ரிபன்கள், வெள்ளிக் கொண்டையூசிகள் எல்லாம் வாஸ்தவமாகவே அவளுக்காகவா? ஒரு நாட்டியக் கச்சேரிக்குப் போவதுபோல் அலங்கரித்துக்கொண்டு அவள் வெளியே போகவா?

இதற்குள் படுக்கையிலிருந்து எழுந்த எர்ஸீலியா அவளை எரிச்சலுடன் கடிந்து கொண்டாள்.

"என்னபாசாங்கு! நான் எதிர் பார்த்ததுதான். இங்கே அதுதான் வழக்கம். உனக்குப் பிடித்தாலும், பிடிக்காவிட்டாலும் நீ அதைத்தான் அணிந்து கொள்ள வேண்டும்!"

"எஜமானியம்மா உத்தரவுப்படி நடக்கிறேன்" என்று அன்லிச்சியா அவளைச் சமாதானப் படுத்திப் பேசினாள். "வேறென்றுமில்லை. கொஞ்சமும் தகுதி யற்ற எனக்காக நீங்கள் இவ்வளவு செலவழிக்கிறீர் களே என்றுதான் யோசித்தேன். நீங்கள் எஜமானி. எனக்கு வியப்பா யிருந்ததால்தான் சொன்னேன் ஏனெனில், நமது ஊரில்—"

"இப்போது நாம் ரோமிலாக்கும் இருக்கிறோம்" என்று எர்சீலியா அவளைப் பேசவிடாமல் தடுத்தாள். "போதும் இந்த உடை உனக்கு ரொம்பப் பொருத்த மாக இருக்கிறது" என்றாள்.

அது வாஸ்தவமே. அவளுடைய கூந்தலின் பொன்னிறத்துக்கும் குதூகலமான கண்களின் தெளிந்த நீல நிறத்துக்கும் பிரகாசமான அந்தச் செம் பட்டுவுடை எடுத்துக்காட்டியது. அவளுடன் வெளியே போகும்போது தான் அவளை விட ரொம்ப வும் மட்டமாகப் போய் விடுவோம் என்று எர்ஸீலியா வுக்கு நன்றாகத்தெரியும். ஆனாலும் அவ்வளவு ஜோ ராய் உடுத்தும் செவித்தாயைத் தான் வைத்துக் கொண்டிருக்கும் கர்வம், டாம்பீக உணர்ச்சி அவள் பொறுமைக்கும் மேலாக வலுத்திருந்தது.

எஜமானியம்மா முதல் தடவையாக அன்லிச்சி யாவை வண்டியில் உலாவ அழைத்துச் சென்றாள் அந்தப்பேதைப் பெண்ணோ நாணத்தால் முகம் சிவந்து குனிந்த வண்ணம் மடியிலிருந்த குழந்தையை விட்டுக் கண்களைப் பெயர்க்கவில்லை. தெருவில் போவோர் ஒவ்வொருவரும் நின்று தன் செவிலித்தாயை உற்றுப் பார்ப்பதை எர்ஸீலியா கவனித்தாள்.

"நிமிர்ந்து பார், தலையை நிமிர்த்திக் கொள். களே பரம் பண்ணாதே. இப்போதுதான் பித்துப் பிடித் திருப்பதாக நினைத்துக் கொள்ளப்போகிறார்கள்" என்றாள்.

தலைநிமிர்ந்து கண்களை உயர்த்த தன்னால் முடிந்த மட்டும் முயன்றாள் அன்னிச்சியா. புதிதான அந்த நகரத்தின் அழகைப் பார்த்து அவளுக்கு ஏற்பட்ட வியப்பில் அவள் வெட்கம் கொஞ்சம் கொஞ்சமாக மறைந்துபோய் விட்டது. எர்ஸீலியா காட்டிக் கொண்டு வந்தவைகளையெல்லாம் பார்த்துக் கொண்டே வந்தாள்.

"ஆஹா என்ன அழகு, அபூர்வம்!" என்றெல்லாம் சொல்லிக்கொண்டாள்.

ஏதோ ஒரு தெருச்சண்டையில் அகப்பட்டு, ரொம்பவும் சிரமப்பட்டு வெளியேறி வந்தது போன்ற உணர்ச்சியோடு பிரமித்துப்போய் கால்கள் நடுங்க, காதுகளில் ஓசை தட்ட, முதல் தடவை வெளியே போய் வீடு திரும்பினாள்.

சாத்யமெனக் கற்பனை செய்து பார்த்துக்கொண்டிருந்ததற்கும் மேலாகத் தன் கிராமத்திலிருந்து வெகு தொலைவில் தான் இருப்பதாக உணர்ந்தாள். உண்மையான உலகமாகத்தோன்றாத வேறு ஒரு உலகத்துக்குப் போய்விட்டதுபோல் தோன்றியது, அவளுக்கு.

இதற்கிடையில் மோரி தன் மனைவியிடம் ஒரு கடிதம் கொண்டு வந்து கொடுத்தான். அது சிசிலியிலிருந்து வந்திருந்தது.

ஸினோரா மான்பிரோனி தன் மகளுக்கு எழுதியிருந்தாள். அதில் செவிலித்தாய் அன்னிச்சியாவின் முதல்மாதச் சம்பளத்தை, அன்னிச்சியா ஏற்பாடு

செய்துகொண்டபடி முன் பணமாக டிட்டா மருல் லோவின் தாயாருக்கு அனுப்பியதை, அந்தக் கிழவி திருப்பியனுப்பிவிட்டாளாம். அந்தப் பணத்தைக் கண்ணால் கூடப் பார்க்க மறுத்து, அதை விட தான் பட்டினியால் சாவதாகவும், அல்லது உணவுக்காக வீடு வீடாக அலைந்து பிச்சையெடுப்பதாகவும் சொல்லி விட்டாளாம். இதற்கிடையில் அன்லிச்சியா தன் குழந்தையை ஒப்படைத்துவிட்டிருந்த அந்த அண்டை வீட்டுக்காரி ஸிஞோராவிடம் வந்து அந்தக் கிழவியைப்பற்றிப் புகார்கூறி, அந்தக் குழந்தையின் தேவைக்கு வேண்டிய பணம்கூடக் கிழவியிடமிருந்து கிடைக்கவில்லை என்று சொன்னாளாம். சம்பளத்தில் பாதியை அந்த ஸ்திரீயிடம் கொடுத்துவிட்டதாகவும், அந்தக்கிழவி பட்டினிகிடக்காமலிருக்க தினம் ஒரு குவளை 'சூப்' கொடுப்பதாக அவளிடம் வாக்குறுதி வாங்கியிருப்பதாகவும் எழுதி இருந்தார். ஆனால் அந்த ஸ்திரீயே தானே தானம் கொடுப்பதுபோல ஏற்பாடு செய்யப்பட்டிருப்பதாகவும், அந்தக் கிழவி பெற்றுக் கொள்ளமாட்டாளாதலால், மீதிப் பணத்தை அவளுக்கு அனுப்பவேண்டாமென்றும் மகளுக்கு யோசனை கூறியிருந்தார். கடைசியில் இந்தச் சங்கடத்தில் அகப்பட்டுக் கொண்டிருப்பதற்கு வருந்துவதாகவும் இதெல்லாம் வேறு ஒருவருடைய யோசனையைக் கேட்டதின் வினை என்றும் முடித்திருந்தார்.

"உன் புத்திசாலித்தனமான யோசனை?" என்று கடிதத்தை மடித்துக்கொண்டே சொன்னாள் எர்ஸிலியா "உனக்கு சுயபுத்தி இல்லையா?"

"எனக்கா?" என்று கத்தினான் எல்லியோ. பிறகு "ஒரு பைத்தியத்தின் மருமகளை தேடிப் பிடித்து அனுப்பும்படியாகவா உன் அம்மாவுக்குக் கடிதம் எழுதினேன்?"

"இல்லை சிசிலியிலிருந்து செவிலித்தாய் அனுப்ப வேண்டுமென்று எழுதினாய். இந்த அற்புதமான யோசனை உனக்கு ஏற்படாதிருந்தால் இந்தக் குழப்பத்தில் மாட்டிக்கொண்டிருக்கமாட்டோம் அல்லவா? ஆனால் நீ இதைப் பொருட்படுத்தவில்லை. அந்த அழகான சிசிலிப் பெண்மீது உனக்கு நாட்டம் இருக்கிறது. நான் அதைக் கவனித்துவிட்டேன்."

மோரி திடுக்கிட்டுப்போய் கண்களை விழித்தான்; "என் குழந்தையின் செவித்தாயின்மீதா?"

"ஆமாம். அவள் காதிலும் விழும்படியாகக் கத்து!"

"இந்த மாதிரி அருவருப்பான குற்றச்சாட்டைக்கேட்டால் யார்தான் கத்தமாட்டார்கள்? ஆகவே என் மகளின் செவிலித்தாய்மீது நீ பொறாமை கொண்டிருக்கிறாய், இல்லையா? உனக்குப் பைத்தியம் தான் பிடித்திருக்கிறது."

"உனக்குத்தான் பைத்தியம்! எனக்கு இருக்கும் புத்தியில் உனக்கு பாதி இருந்தால்கூட போதும். சரி. போதும், இத்துடன் விட்டு விடுவோம்."

"இந்தப்பணத்தை வைத்துக்கொண்டு என்ன செய்வது? அதுதான் கேள்வி."

"அவள் மாமியார் இந்தப் பணத்தைப்பெற்றுக் கொள்ள மறுப்பதாக அவளிடம் தெரிவிக்கவேண்டுமே அதைப்பற்றி ஒரு கணமாவது யோசித்துப் பார்த்தாயா?"

"என்னை என்னவென்று நினைக்கிறுய்? நான் யோசிக்கமாட்டேன். இந்தச்செய்தி அவளை தூக்கி வாரிப்போட்டுவிடும்."

மோரி அமைதி இழந்து கோபத்தோடு தலையைச் சிலுப்பிக்கொண்டே போய்விட்டான்.

## 4

நிலைமை இவ்வளவுக்கு வந்துவிட்டது. தன் குழந்தையிடம் அவன் கொஞ்சக்கூடாது—ஏன்...அதைப் பார்ப்பதைக்கூட அவன் நிறுத்திவிடவேண்டும். காரணம் இந்தக் கொஞ்சுதலும், கனிந்தபார்வைகளும் எல்லாம் தன்மீது செலுத்தப்பட்டதாகத்தான் அந்த செவிலித்தாய் நினைத்துக்கொள்வாளாம். அவன் மனைவி சந்தேகப்பட்டாள்.

ஒரு நாள் பட்டவர்த்தனமாக அவனைக்கேட்டு விட்டாள். "பிள்ளையை நான் வைத்துக்கொண்டிருக்கும்போது நீ ஏன் குழந்தையைக் கொஞ்சக்கூடாது? அவள் வைத்துக் கொண்டிருக்கும் போது ஆர்ப்பாட்டம் செய்கிறுயே?"

அவளுடைய வீண் சந்தேகத்தால் வெகுவாக மனம் புண்பட்ட என்ரியோ கோபத்தோடு பதில் சொன்னுன்: "அவன்தான் உன்னிடம் இருக்கிறதே இல்லையே!"

குழந்தையை அவள் கைகளில் எடுத்துக்கொண்ட பொழுதெல்லாம், அது கத்த ஆரம்பித்து, செவிலித் தாயை நோக்கிக் கைகளை நீட்டும் என்பது வாஸ்தவமே. ஒருவேளை எர்ஸீலியா குழந்தையைச் சரியாக வைத்துக்கொள்ளாததாலோ என்னவோ? அவளுக்குக் குழந்தையை வைத்துக்கொள்ளப் போதிய அனுபவமில்லை என்பதல்ல. அவள் ராங்கியுடன் அணிந்திருந்த அந்த ஆடைகளை குழந்தை அசிங்கப் படுத்திவிடுமே என்ற பயம்தான் எப்போதும் அவளுக்கு.

அவள் வீட்டைவிட்டு அபூர்வமாகத் தான் வெளியே போவாள் என்ருலும் உடை விஷயத்தில் அவள் அதிகப் பணம் செலவழித்து வந்தாள். ஆனுல் எல்லாவற்றிலும், எல்லாரிடமும், ஏன் தன்மீது கூட அவள் அதிருப்தி கொண்டிருந்தது போலவே, இதிலும் திருப்தியில்லாமலிருந்தாள். தான் சந்தோஷமற்றிருப்பதாகவே நம்பினுள்; உண்மையும் அப்படியே. ஆனுல் அவளுடைய சந்தோஷமின்மைக்குக் காரணம் தன் பொலிவின்மை, சிடுமூஞ்சிக்குணம், பகைமை யுணர்ச்சி என்று கருதுவதற்குப் பதிலாக, அந்தக்குற்றத்தைப் பிறர்மீது சுமத்தினுள். தான் மட்டும் தகுந்த மனிதனை - தன்னைக்காதலித்து தன்னை மணந்துகொள்ளக் கூடிய யாராவது ஒருவனைச் சந்தித்திருந்தால், தனக்கு அகமும்புறமுமாக உள்ள இந்த பயங்கர நிலையை உணர்ந்திருக்கமாட்டோம் என்று நிச்சயமாக நம்பினுள்.

இப்போது அவள் குழந்தையைக்கூட வெறுக்க ஆரம்பித்துவிட்டாள்; காரணம் அவளைவிட செவிலித் தாயையே அது அதிகம் விரும்பியது. அவள் வாழ்க்கை உற்சாகமின்றிச் சோர்ந்து கண்ணீருடன் கழிந்தது. சில சமயம் மனைவியின் கண்கள் சிவந்து வீங்கியிருப்பதை மோரி கவனித்தானுலும் அதைக் கவனியாததுபோலவே பாவித்து வந்தான். இதிலும் அவளுக்கு சிரத்தை ஏற்படச் செய்வதற்குத் தான் செய்யக்கூடியதொன்றுமில்லை என்ற முடிவுக்கு அவன் வந்துவிட்ட பிறகு, சாத்யமான அளவிற்கு அவளுடன் பேசாமலிருப்பதையே விரும்பினுன். வாழ்க்கையை நன்கு அனுபவிக்க வேண்டும் என்று அவள் ஆத்திரப்பட்டாள்; ஆனுல், அவள் அதற்கு லாயக்கற்றவள் என்று அவன் கருதினுன். சந்தோஷத்தை ஒவ்வொருவரும் தனக்குத்தானே சம்பாதித்துக் கொள்ளவேண்டும் என்பதை அறியாமல் பிறர் அதைத் தன்னிடம் கொண்டு வந்து தரவேண்டும் என்று அவள் எதிர்பார்த்தாள். அவள் மகிழ்ச்சியற்றிருப்பதால் அவனுக்கும் மகிழ்ச்சியின்மை ஏற்பட்டது. ஏனென்றுல் அவளோடு அவன் வாழ்க்கை நடத்த வேண்டியிருந்தது. அவன் வாழ்வோ நல்ல பிழைப்பு! அதாவது பகல் முழுதும் படித்துக்கொண்டே இருப்பது! அதிர்ஷ்டவசமாக அவனுடைய பொதுவுடைமைத் தோழர்கள் ஓரோர் சமயம் அவனைப் பார்க்க வருவார்கள். அவர்களோடாவது அவன் தாராளமாகப் பேசி வாதித்துக் கொண்டிருப்பான்.

இந்த விவாதங்களின்போது படிப்பறையில் வேலைபார்த்துவந்த அந்த வயதான குமாஸ்தா ஸீனர் பெலிஸிஸ்ஸிமோ ராமி செல்லியை வெளி அறைக்கு அனுப்பி விடுவான். அவனும் அந்தப் புரட்சிக் கனவான்களை வணங்கிவிட்டு, அந்தஸ்துடன் வெளியே போய் விடுவான். ஆனால் நடையைக் கடந்து கதவைச் சாத்திவிட்ட பின்பு இளித்துக் கொண்டு ரொம்ப திருப்தியோடு தன் கைகளைத் தேய்த்துக்கொள்வான். கருமை தீட்டியிருந்த மீசையை முறுக்கி விட்டுக் கொள்வான். ஹாலுக்குள் சென்று அந்த அழகான சிவிலியன் செவிலித்தாயைச் சந்திக்கவேண்டு மென்று ஆசையுடன் அங்குள்ள நாற்காலியில் அமர்வான்.

ஏற்கனவே அவன் ஒருதரம் அவளோடு சம்பாஷிக்க முயற்சி செய்திருக்கிறான். அது "என் நாமகரணம் தெரியுமோ—பெலிஸிஸ்மோ?" என்பதோடு நின்றுவிட்டது.

ஆனால் என்னிச்சியா அதைப் புரிந்து கொள்ளாமல் முகத்தைத் திருப்பிக்கொண்டாள். "பெலிஸிஸ்மோ; என்றால் அதிர்ஷ்டசாலி என்று அர்த்தம். ஏனென்று எனக்கே ஆச்சரியமாயிருக்கிறது, இது "ஆச்சரியமாகத்தான் இருக்கிறது" என்றான் மறுபடியும். நல்ல அதிர்ஷ்டம் கொண்டு வருவதற்காக அவனுக்கு அந்த அழகான பெயர் இடப்பட்டிருந்தது. அவனுக்கும் அதனால் எவ்வளவோ நன்மை ஏற்பட்டிருந்தது! அதிர்ஷ்டசாலி என்ற பெயரைத் தவிர கொஞ்சமேனும் திருப்திப்படுவதற்கான

அதிர்ஷ்டம் இன்னும் கிட்டவில்லை. ஒரு நாளைக்கு அவன் எட்டணு வீதம்தான் சம்பாதித்தான். அதை வைத்துக் கொண்டுதான் அவன் தன் காலத்தை ஓட்டிக்கொண்டிருந்தான். எனினும் துரதிருஷ்டவச மாக அவனிடம் ஒரு குணம் இருந்தது—'பெண் பித்து' அதை அவனுல் தவிர்க்க முடியவில்லை, பெண்கள் என்ருலே அவனுக்குப் பிரமாதம்.

உதாரணமாக அந்தக் குட்டி அன்னிச்சியா! என்ன மோகமூட்டும் வடிவம்! அவளைப்பார்க்கும் போதெல்லாம் அவனுக்கு ஒருவித நெகிழ்ச்சி ஏற்பட்டது. நல்ல நடத்தையுள்ள ஒரு யுவதியாக தன் கண்களுக்குத் அவள். தோன்றினுள் என்று அவன் சொல்வதன் காரணம் அவனுடைய ஒரே எண்ணந்தான். அதாவது செவிலித்தாய்மார் எல்லோருமே கெட்டுப்போனவர்கள். அவர்கள் எல்லோருக்கும் பொதுச் சொத்து ஆகி விடுவார்கள் என்பது அவன் எண்ணம்.ஸீனர்ராமி செல்லியின் கடைக்கண் நோக்குகளையும் அசட்டுச் சிரிப்புகளையும் அன்னிச்சியா கவனிக்கும்போது சிரிப்பதா, ஆத்திரப்படுவதா என்று அவளுக்கே தெரியவில்லை, தலைமயிர் இன்னும் நரைக்காமல் அழகாக இருந்த அந்தச் சின்னக்கிழவன் அவளுக்கு விசித்திரமாகத் தோன்றினுன்.

ஒரு நாள் ஹாலில் குழந்தையைக் கையில் வைத்துக்கொண்டு அதன் கால்களைத் துணிக்கு வெளியே எடுத்து விடும் முயற்சியில் ஈடுபட்டிருந்தான் ஸீனர் மோரி. தன் மகனுக்கு இட்டிருந்த லியோ

விடா என்ற பெயரை ஆறுமாத காலமாகியும் உச்சரிக்கத் தெரியாமல் நோனிடா என்றே கூப்பிட்டுவந்தாள் அன்னிச்சியா.

"என்ன அசடாக இருக்கிருய்? நோனிடாவாவது? லியோ-னி-டா" என்று அவளைக்கேலி செய்தான் ஸீனர் ராமிசெல்லி

"எனக்குச் சொல்ல வரவில்லை"

"சரி பெலிஸிஸ்ஸிமோ—இதையாவது உனக்குச் சொல்லமுடியுமோ? என் பெயராக்கும் அது!"

அன்னிச்சியா குழந்தையை எடுத்துக்கொண்டு "அதுவும் என்ஞல் முடியாது" என்று சொல்லிக் கொண்டே உள்ளே போய் விட்டாள்.

"நானும்தான்!" என்று ஸீனர் ராமி செல்லி வேதாந்தமாகப் பேசி விட்டு அறையில் நடக்கும் விவாதம் முடியட்டும் என்று காத்துக்கொண்டிருந்தான்.

யுக்திகள்—போக்கிரிகள்-உழைப்பாளிகள் கல்வி—குறைந்த பக்ஷ உபகாரத் திட்டம்;

இந்த ரீதியான வார்த்தைகள் அடிக்கடி உள்ளேயிருந்து ராமி செல்லியின் காதில் விழுந்தன—ஆனுல் அவன் அவைகளைக் கவனிக்கவே இல்லை. அந்தச் செவிலித்தாய் மறைந்து சென்ற கதவுப் பக்கமாக கடைக்கண் செலுத்தி அடிக்கடி ஏக்கத்துடன் தலையை ஆட்டிக்கொண்டும் பெருமூச்செறிந்து கொண்டும் இருந்தான் அன்னிச்சியா மிருதுவாகப் பாடிக்கொண்டிருந்த தாலாட்டு-கிராமியப்பாட்டு—அவன் காதில் விழுந்தது.

இப்போது தளதளவென்று வளர்ந்துவிட்ட குழந்தையை, பார்த்தபோது, அன்னிச்சியாவுக்குத் தன் குழந்தையின் ஞாபகம்தான் வந்தது. அவள் விட்டு விட்டு வந்தபோது தன் குழந்தை இருந்த பருமனைவிட வளர்ப்புக் குழந்தை பருமனாக இருந்தது. தான் மட்டும் பாவம்—தன் குழந்தையை வளர்க்க முடிந்திருந்தால்-லிஸ்லிடு இப்போது பெரியவனாகியிருப்பான்! இப்போதைய நிலையில் என்ன நடந்திருக்குமென்று யார் சொல்லமுடியும்? அவனைப்பற்றிய பயங்கர சிந்தனைகள் அவளைச் சுற்றிக்கொண்டே இருந்தன. அடிக்கடி கனவுகளில் எலும்பும் தோலுமாக இளைத்து சீக்குப் பிடித்து கழுத்து மெலிந்து தோள்மீது சாய்ந்து கிடக்கும் பெருத்த மண்டையுடன் கூடிய விகாரமான குழந்தையாக கண்டு வந்தாள். ஏங்கி கிலிபிடித்து அசையாமல் அவனையே உற்றுப்பார்த்துக் கொண்டிருப்பாள். தன் லிஸ்லிடுவா இவன்? இதென்ன கோரமான நிலைமை கனவில் அந்தக் குழந்தைக்கு ஆவலுடன் பால் கொடுக்கப்போவாள்—ஆனால் குழந்தை தன் பாட்டியின் கொடிய கண்களோடு வெறித்து நோக்கி, அவள் ஆர்வத்தோடு கொண்டு வந்த மார்பகத்திலிருந்து முகத்தைத் திருப்பிக்கொள்ளும். என்ன பயங்கரம்? ஒரு நடுக்கத்துடன் அவள் விழித்துக் கொள்வாள். கோரமான நிலையில் இருப்பதாகக் கண்ட அந்தக் குழந்தையின் உருவத்தை மறக்கமுடியாமல் விடியும் வரையில் படுக்கையில் புரண்டு கொண்டுருப்பாள்.

தன் கவலையை எஜமானியம்மாவிடம் தெரிவிக்கத் துணிவும் வரவில்லை. ஒரு வேளை தன்னுடைய நச்சரிப்பைக் கண்டு வெகுண்டோ, தன் குழந்தையைப் பற்றிய விசாரத்தில் வேலையைச் சரியாகச் செய்யவில்லை என்று நினைத்தோ அடிக்கொருதரம் எஜமானி கோபிக்கிறாள். ஆனால் வாஸ்தவத்தில் மனச்சாட்சி அறிய அப்படி ஒன்றும் இல்லை. யாரும் அன்னிச்சியாவை அப்படிச் சொல்லிவிடமுடியாது. நோனிடாவைப் பார்த்தாலே போதும், எவ்வளவு கட்டான, திடமான குழந்தையாக வளர்ந்து விட்டான் அவன்.

முன்பெல்லாம் இருந்த ஸினோரினோ எர்ஸீலியாவாக அவள் எஜமானி இப்போது தோன்றவில்லை. ஒரு வேலைக்காரியைவிட, கேவலமாய் நடத்தப்பட்டாள். அந்தச் செவிட்டு வேலைக்காரி மார்கெரிடா போய்விட்டதால், எல்லா வேலைகளையும் அவளே மனம் ஒப்பிச் செய்து கொண்டிருந்தாள். ஒரு சின்ன விஷயத்திற்குக்கூட, பிரமாதமாக ஆத்திரப்படும்படியான அவ்வளவு நரம்புத்தளர்ச்சி வாய்ந்த தன் எஜமானியை உத்ஸாகப்படுத்த எப்போதும் தான் உத்ஸாகமாகயிருக்க விரும்பினாள்.

“இதோ இருக்கேன் ஸினோரினோ! நான் செய்கிறேன். நீங்கள் கவலைப்பட வேண்டாம்” என்பாள். தன் விசுவாசத்திற்குப் பிரதியாக எஜமானி தன்னிடம் கொஞ்சம் அனுதாபம் காட்டியிருக்கலாம் என்று மட்டும் நினைத்தாள். உதாரணமாக, சிசிலித்

நீலிலிருந்து தபால் வந்ததும் கடிதங்களை எடுத்துக் கொண்டு 'அம்மா! அம்மா!' என்று ஓடிவருவாள்.

"ஏனடியம்மா, இந்த ஆர்ப்பாட்டம்? ஏதாவது லாட்டரியில் பிரைஸ் கிடைத்துவிட்டதா என்ன?"— அடிக்கடி இம்மாதிரியான சிடுசிடுத்த வார்த்தைகள் தான் அவளை வரவேற்கும். அவளுக்கு மரத்துப் போய்விட்டது. தன் குழந்தையைப் பற்றிய விவரம் ஏதாவது தெரிவிப்பாள் என்ற நம்பிக்கையுடன் எஜமானி கடிதத்தை முடிக்கும் வரையிலும் காத்துக் கொண்டு நிற்பாள். ஆனால் குழந்தையைப்பற்றி ஒரு வார்த்தைகூட இருக்காது.

கடைசியில் கடிதத்தை உறைக்குள் போடும் போது மட்டும் பவ்யத்தோடு கேட்பாள்: "என் லிஸ் ஸிடுவைப்பத்தி ஏதாச்சும்—ஒன்றும் இல்லையா?"

"எல்லாம் நல்லாயிருப்பதாகத் தான் எழுதி யிருக்கு!"

"அந்த—என் மாமியார் கிழவி?"

"அவளும் தான்."

இந்த பதில்களால் தான் அவள் திருப்தி யடைய வேண்டியதாயிற்று. அங்கிருந்து வேறு எவ்வித செய்தியும் அவளுக்கு வந்திராதா? தனக்கு எழுதப் படிக்கத் தெரியாததற்காக ரொம்பவும் வருத்தப்பட் டாள். தான் வீட்டைவிட்டு வந்தபோது, அந்தப் பிரிவு துன்பகரமாயிருக்கும் என்று ஏற்கெனவே அவள் எதிர் பார்த்திருந்தாள்—என்றாலும் இம்

யாதிரி ஒரு நரகவேதனையாக இருக்குமென்று அவள் நினைக்கவே இல்லை.

எப்படி இருந்தாலும் இன்னும் சில தினங்களில் தன் வளர்ப்புக் குழந்தைக்கு ஏழுமாதம் நிரம்பிவிடும். ஒன்பதாவது மாதத்தில் வளர்ப்பு முறை முடிந்து விடும் என்று அந்தக்குழந்தையின் தந்தை தீர்மானித்திருந்தான். ஆகவே இரண்டே மாதங்கள் தான் இந்த வேதனை. பொறுப்போம், பொறுப்போம் என்ற இந்த ஆறுதல் நினைவுடன் அவள் தன் துரதிர்ஷ்டத்தைச் சகித்துக்கொண்டிருந்தாள் ஆனால் அந்தக் குழந்தைக்கு ஏழாவது மாதமும் நிரம்பியது அதோடு நோனிடாவுக்கு முதல் பல்லும் முளைத்து விட்டதென்று இரட்டை சந்தோஷம் கொண்டாடிய அதே தினத்தில்—தனக்கு ஏற்பட்டிருந்த துக்கத்தைப்பற்றி அவளுக்கு நினைப்பே இல்லை.

வெளிக்கதவு மணி அடிக்கும் சத்தம் கேட்டது. தபால்காரன் என்று எண்ணி ஆவலோடு எதிர் நோக்கிக் கதவைத் திறக்கப்போனுள். ஒரு காரணத்தால்—யாரை உள்ளே அனுமதிக்கப்போகிறோம் என்று அறிவதற்கு அவகாசம் கிடைப்பதற்கு முன்பாகவே—பலமான அடி அவள் மண்டையில் விழுந்தது. அவள் தரையில் விழுந்துவிட்டாள். அவள் கணவன் டிட்டோ மருல்லோ பயங்கரமாகவும் ரௌத்ராகாரமாகவும் அவள் முகத்தில் மிதிக்கப் போவது போல காலை உயர்த்திக்கொண்டு அவள்மேல் நின்று கொண்டிருந்தான்!

“அடி நாயே! எங்கே உன் எஜமான்?”

அவள் அலறுவதைக் கேட்டு ஸீனர் மோரியும் அவன் மனைவியும், ராமி செல்லியும் ஓடிவந்தனர். டிட்டோ மருல்லோ, மோரி மேல்பாய்ந்து அவன் கோட்டுக் காலரைப் பற்றிப்பிடித்துக்கொண்டு முன்னும் பின்னுமாக உலுப்பிக்கொண்டே கத்தினன்.

“என் மகன் செத்துப்போனன். புரிகிறதா? செத்துப்போனன்!” என்று அன்னிச்சியா பக்கம் திரும்பிக்கூவினன். அதைக்கேட்டதும் அன்னிச்சியா வீறிட்டுக் கத்திவிட்டாள். “அடே சண்டாளா? நீ இதற்கு என்ன செய்யப்போகிருய்? எனக்குப் பணம் கொடுக்கப்போகிருயா? இல்லை—பதிலாக உன் குழந்தையைக் கொடுக்கப்போகிருயா?” என்ருன்.

“ஐயோ. அவனுக்குப் பைத்தியம்!” என்று எர்சீலியா பயத்தால் நடுங்கிக்கொண்டே கத்தினுள்.

பலமற்றவனுக இருந்தாலும் எதிர் பாராத ஒரு விறுவிறுப்புடன் ஸீனர் மோரி தன்னை விடுவித்துக்கொண்டு, மருல்லோவைப்பலமாகக் கதவை நோக்கி நெட்டித்தள்ளினுன். கையை நீட்டிக்காட்டிக்கொண்டே, “போடா வெளியே, ராஸ்கல்! என் நடைவாசலைவிட்டு உடனே போய் விடு!” என்று கத்தினுன்.

“ஜாக்கிரதை!” என்ருன் டிட்டோ மருல்லோ. “நான் இழப்பதற்கு ஒன்றும் இல்லை. உன்னைப் பார்த்துக்கொள்ளுகிறேன். என் தாய் அனதை விடுதியில் இருக்கிருள். மகனே செத்துவிட்டான் ஆகவே

உன் முகத்தில் காரியுமிழ்ந்து இந்த நாயை என்னோடு இழுத்துச்செல்ல வந்திருக்கிறேன்'' என்று சொல்லிக் கொண்டே, கீழே படுத்துக்கொண்டிருந்த தன் மனைவி யிடம் திரும்பி, "எழுந்திரு உடனே!" என்றான்.

அதே சமயம் ஒருவருக்கும் தெரியாமல் நழுவிச் சென்ற ஸீனர் ராமிசெல்லி பீதியுடன் உள்ளே ஓடி வந்தான். அவனோடு இரண்டு போலீஸ் காரர்கள் வந்தார்கள். ஸீனர் மோரி அவர்கள் பக்கம் திரும்பி "இவனைப்பிடித்துக்கொண்டு போங்கள். இந்த முரடன் பலாத்காரமாக வீட்டினுள் நுழைந்து என்னை வைது பயமுறுத்துகிறான். பிடித்துக்கொண்டு போங்கள் இவனை"என்று ஆத்திரத்தோடு கத்தினான்.

போலீஸ்காரர்கள் மருல்லோவின் கையைப் பிடித்துக்கொண்டார்கள். தன்னை விடுவித்துக் கொள்ளத் திமிறிக்கொண்டே "என் மனைவி! அவள் வேண்டும்" என்று கத்தினான். ஆனால், அவர்கள் அவனை இழுத்துக்கொண்டு போய்விட்டார்கள். அத்துமீறி நுழைந்து தாக்கியதாகப் புகார்செய்ய மோரியும் அவர்களோடு போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்றான்.

## 5

மறுநாள் ஸீனோரா மான்பிரோனியிடமிருந்து அந்தக் குழந்தை இறந்ததுபற்றியும், மருல்லோவின் கிழத் தாய் சீக்காக இருப்பதையும் பற்றி—இங்கே காரியம் மிஞ்சிப்போனபின்—கடிதம் வந்தது. டிட்டோவைப் பற்றி அதில் குறிப்பிடவில்லை.

அவன் அந்தத் தீவாந்திரத்திலிருந்து தப்பிவந்து விட்டதாகத்தான் மோரி முதலில் நினைத்தாள். ஆனால் டிட்டோ விடுதலை செய்யப்பட்டதாகப் பின்னால் தெரியவந்தது. ஆஸ்பத்திரியிலிருந்து அவன் தாய் விண்ணப்பித்துக்கொண்டதின் விளைவாக, போலீஸ் அதிகாரிகள் சிபாரிசின் பேரில் அவனுக்கு மன்னிப்பு அளிக்கப்பட்டு, சிறைவாசம் வஜா செய்யப்பட்டது. அடுத்த மூன்று வருஷங்களுக்கு போலீஸ் கண்காணிப்பில் அவன் இருக்க வேண்டும் என்ற நிபந்தனையை மீறி அவன் ஏதாவது செய்ய, சிறிது முயற்சித்தாலும் மீண்டும் அவன் தீவாந்தரம் அனுப்பப்படுவான் என்று எச்சரிக்கை செய்து ரோம் போலீஸார் அவனை சிசிலிக்கு நாடு கடத்திவிட்டார்கள்.

தன் புருஷனுடைய மிருகத்தனமான தாக்குதலாலும் தன் குழந்தையின் மரணத்தால் ஏற்பட்ட வெறுப்பும்—இரண்டும் சேர்ந்து அன்னிச்சியாவை கடுமையான ஜுரத்தில் கிடத்திவிட்டது. மூன்று நாட்களாக அவள் மூளையே கலங்கிவிடும் போலிருந்தது. பிறகு ஜன்னி நிலைமை தணிந்து பேத்தல் நின்றுவிட்டாலும் அதைவிட மோசமான மனோ நிலைமை ஏற்பட்டுவிட்டது. அவள் பார்வையில் அர்த்தம் இல்லை. ஏதாவது சொன்னால் 'ஆமாம்' என்று கூறியோ, அல்லது தலையை அசைத்தோ பதில் சொன்னாளே தவிர பிறகு அவள் அவற்றைப் புரிந்துகொண்டதாகத் தெரியவில்லை.

அவள் தாய்ப்பால் வரண்டுபோய்விட்டது. குழந்தையின் வளர்ப்பு முறையை அவள் மாற்ற

வேண்டியிருந்தது. வீட்டில் ஒரே குழப்பமாக இருந்தது. அனுபவமும் தகுதியும் இல்லாத எர்சீலியா தொடர்ந்து இரண்டு நாட்களாகக் குழந்தையைக் கவனித்துக்கொண்டாள். செவிலித்தாயை நினைத்து நினைத்து அழுதுகொண்டிருந்த குழந்தை ஒரு கணம் கூட, அமைதியாக இருக்கவில்லை. இதோடுகூட, அவள் வீட்டைக்கவனித்துக் கொள்வது, புதிய வேலைக்காரிக்குச் செய்யவேண்டிய வேலைகளைச்சொல்வது, வியாதிக்காரியைப் பார்த்துக்கொள்வது முதலிய வேலைகளெல்லாம் அவள் தலையில் விழுந்தன. அவளுக்கு ஒரு உதவியும் செய்யாமல் பத்திரிகையை கையில் வைத்துக்கொண்டே சுற்றிக்கொண்டிருந்த தன் கணவனைக்கடிந்துகொண்டாள்.

"நான் என்ன செய்வேன் இதற்கு?" என்று கேட்டான் அவன்.

"என்னது?" என்று கத்தினாள் அவன் மனைவி. "உடம்பை அசைந்துகொடுத்து ஏதாவது வேலைசெய். வேறு ஒரு உதவியும் இல்லாமல் குழந்தையைக் கையில் வைத்துக்கொண்டு தன்னந்தனியாக நான் அவதிப்படுவது உனக்குத் தெரியவில்லையா? எல்லாவற்றையும்விட இவ்வளவுதொல்லைக்கும் காரணமான இந்தப் பெண்ணை நான் எப்படிக் கவனித்துக்கொள்வது? வெளியேபோய் ஏதாவது ஒரு தர்ம ஆஸ்பத்திரியில் அவளுக்கு ஒரு இடம் பார்."

இதைக்கேட்டதும் என்னியோ எழுந்து ஆச்சரியத்துடன் தன் மனைவியையே பார்த்தான்.

"என்ன பிச்சைக்கார விடுதிக்கு அவளை அனுப்பவா?"

"ஆமாம்—ஏது அவளுக்காக ரொம்ப ரொம்ப அநுதாபம் காட்டுகிறாயே" என்று விஷமக்குரலில் பதில் பேசினாள் எர்சீலியா. "அவளுக்கு அநுதாபம் காட்டுகிறாயே; ஆனால், என்னிடம் அநுதாபம் இல்லை. இரவு எல்லாம் நான் தூங்கவே இல்லை. தலை கோதிக்கொள்ளக்கூட அவகாசம் இல்லாத என்னிடம் துளிக்கூட உனக்கு அநுதாபம் இல்லை. ஆகவே நான் எல்லாருக்கும் வேலைக்காரியாக இருக்கவேண்டும். இல்லையா? கொஞ்சம் பொறு. அவள் உடம்பு சற்றுக் குணமாகட்டும். உனக்கு வழி காட்டுகிறேன். ஒரு நிமிஷத்திற்கு மேல் அவளை இந்த வீட்டில் தங்க விடுகிறேனா பார்!"

ஆனால் அன்னிச்சியா குணமடைவதற்கான அறிகுறிகள் தென்பட்டபோது தன் பயமுறுத்தலை நிறைவேற்றும் துணிவு அவளுக்கு வரவில்லை. அன்னிச்சியாவின் மாமியார் மறுத்துவிட்ட அந்தப் பணத் தொகையை அவளுக்கென்று வைத்துக்கொண்டிருப்பதாகச்சொல்லி, சம்பாஷணையை அந்தப் போக்கில் திருப்ப முயன்றாள்.

ஆனால் அன்னிச்சியா "அதை வைத்துக்கொண்டு நான் என்ன செய்யப்போகிறேன். எனக்கு மீதி இருப்பதெல்லாம் இந்தச் சின்னக் குழந்தைதான்!" என்றாள்.

இதைச் சொல்லும்போதே நோனிடாவை இறுக அணைத்துக்கொண்டாள். முன்போலவே அவள்

அவளிடம் வந்து பிரியமாக இருக்க ஆரம்பித்தான். வேலைக்காரி முதல் தடவை குழந்தையைத் தன் படுக்கைக்குக் கொண்டுவந்தபோது அதன் வரவையே வெறுத்தாள். இறந்துபோன குழந்தை தான் தன்னுடைய ஒரே குழந்தை என்று நினைத்தாள். ஆனால் பிரியத்தோடு தாவி குழந்தை தன்னிடம் வர அவஸ்தைப்படுவதைக்கண்டதும் அவள் மனசு இளகி விட்டது. தன் குழந்தையைப்போல எண்ணிமார்போடு அணைத்துக்கொண்டாள். ஆறுய்க் கண்ணீர்விட்டு அழுதாள். துக்கப்பட்ட அவள் மனசுக்கு இதுசற்று ஆறுதல் அளித்தது. "அட, என் கண்ணே! என்னிடமிருந்து என்ன எதிர்பார்க்கிறுய்? என்னிடம் பாலில்லையே! உனக்கோ, வேறு யாருக்கோ கொடுக்க ஒரு சொட்டுப்பால் கூடக்கிடையாதே! என் கண்ணே! என் மாத்ரு சக்தி அவ்வளவு தான்" என்றுள்.

தன் குழந்தை எதனுல் செத்தது? உணவு இல்லாத நினுலா, அல்லது அசிரத்தையாலா?—இவையெல்லாம் அவளுக்குத் தெரியாதா? இந்த சிறு விஷயம் கூட அவளுக்குத் தெரியாமல் எப்படி இருந்திருக்கமுடியும்? ஏதோ ஒரு நாய்க்குட்டி செத்த தகவல் கிடைப்பது போல அவளுக்கு சேதி கிடைத்தது. ஐயோ! தாயும், தகப்பனும் கிட்ட இல்லாமல் அனுதையாக விடப்பட்ட குழந்தை! எங்கேயோ அன்னியர்களிடையே இறந்தது! கடவுளே! அட, கடவுளே!

ஆனுல் அவளுடைய வேதனையை யார் பொருட்படுத்துகிறுர்கள்? அவளுடைய யஜமானியோ

ஏழாவது மாதத்திலேயே தன் குழந்தைக் குப்பால் இல்லாமல் போனதைப்பற்றி கோபம் கொண்டிருந்தாள். ஆமாம், அவளிடம் எஜமானி கோபமாக இருந்தது நியாயம் தான். அவளுக்கு தன் குழந்தையைப்பற்றிய நினைவுதான் இருக்க முடியும். இன்னொரு குழந்தை இருந்ததைப்பற்றி அவளுக்கென்ன? ஆத்திரப்படலாமே தவிர உண்மை யில் துக்கப்படமாட்டாள். ஆனால் அவள் குழந்தை எனக்கும் சொந்தம் என்பதையாவது அவள் அறிந்து கொள்ளவேண்டும். குழந்தையைப் பெற்ற சிரமத்தை அவள் பட்டிருந்தால், நான் அதை வளர்த்த சிரமத் தைப் பட்டிருக்கிறேன். எனக்கும் வேறு குழந்தை யில்லை என்று நினைத்தாள் அன்னிச்சியா.

தன் கையைவிட்டு குழந்தை வேறு ஒருவரிடம் போனதைப் பற்றி எர்சிலியா வருத்தப்படவில்லை யென்றாலும், குழந்தையைத் தன் சொந்தப்பொருளா கக் கருதிவிட்ட அந்த செவிலித்தாயிடம் அவளை ஒட் டிக்கொண்டிருக்கவிடக்கூடாதென்ற எண்ணத்தை உறுதியாகக் கொண்டாள். முன்னைவிட உறுதியாக அவளை நீக்கி விட வேண்டும் என்பதிலேயே கண்ணும் கருத்துமாக இருந்தாள்—மேலும் அவளைத் தன்னி டம் வேலைக்கு வைத்துக்கொள்ள வேண்டும் என் பதற்கு என்ன நியாயம் இருக்கிறது? அன்னிச்சியா வீட்டுவேலைக்காரியாகவோ, அல்லது குழந்தை யின் வளர்ப்புத்தாயாகவோ இருக்கத் தகுதியுடைய வள் இல்லை. தன் குழந்தை சுத்தமான இத்தாலிய பாஷை பேசப்பழகவேண்டும் என்று எர்சிலியா

விரும்பினாள். சிசிலிய உச்சரிப்பில் பேசக்கூடிய அந்தப் பெண்ணோடு அவன் எப்போதும் இருந்தால் இது எப்படி சாத்யமாகும்? ஊஹூம். இதெல்லாம் சரிப்படாது. அவளை வேலைக்கு வைத்துக்கொண்டால் ஒரு அழகான பெண்ணைச் சதா தன் புருஷன் பார்த்துக்கொண்டே இருக்க தான் உதவிசெய்ததாக ஆகும்! அது கூடாது! தன் புருஷனே அவளை வேலையிலிருந்து நீக்கிவிடவேண்டும்!

"நானா? நான் ஏன் அப்படிச் செய்யவேண்டும்?" என்று மோரி அவளைக் கேட்டாள்.

"நீ வீட்டுக்கு எஜமானாக இருப்பதால் தான். அந்த சந்தர்ப்பத்தில் நீ காட்டிய அனுதாபம், இரக்கம், இவற்றின் விளைவாக இயற்கையாக அவள் மனசில் ஏதோ எண்ணங்கள் ஏற்பட்டிருப்பதாக நான் நினைப்பதால் தான்!"

"நானா?" என்றான் மோரி மறுபடியும். "அவளிடம் அப்படி நடந்துகொண்டதே இல்லையே!"

"ஒரு வேளை அவளாக நினைத்துக்கொண்டாளோ என்னவோ? எல்லாம் எனக்கு ஒன்றுதான். உனக்குத் தெரியவில்லையா? ஏற்கெனவே அவள் இதைத் தன் சொந்த வீடாக நினைக்க ஆரம்பித்துவிட்டாள். குழந்தைக்கு இரண்டு தாய்மார்கள்! வீட்டுக்கும் இரண்டு எஜமானிகள்! இப்படி இருக்கும் நிலைமை உனக்கு பிடித்தாலும் எனக்குப் பிடிக்கவில்லை."

அவளோடு விவகாரம் பண்ணினால் விஷயம் இன்னும் மோசமாகத்தான் போகும் என்பது மோரிக்குத்

தெரியுமானாலும் தன் கருத்துக்கு நியாயம் காட்டிப் பேசமுயற்சித்தான்.

"ஆமாம். ஆதாரமில்லாமல் இந்த மாதிரியான அருவருக்கத்தக்க எண்ணங்களை எல்லாம் மனசில் கொள்வதிலும் ஒருவித கெடுதலும் இல்லாத இடத்தில் ஏதோ கெடுதல் இருப்பதாக அனுமானிப்பதிலும் ஏன் இப்படிப் பிடிவாதமாயிருந்து கொண்டு வருகிறாய்? நீ தான் பார்க்கிறாயே. என் வேலையிலும் படிப்பிலுமே சதா கவனமாக இருக்கிறேன். என் விசுவாசத்தைப்பற்றிச் சந்தேகப்பட இடமில்லாமல் நடந்துவருகிறேன். அமைதியான வாழ்க்கைக்காக-உன்னைத்திருப்திப் படுத்துவதற்காக—என் குழந்தையோடு கொஞ்சுவதைக்கூட நிறுத்திக்கொண்டுவிட்டேன். அப்படியும் அந்த ஏழைப்பெண் மீது நீ சந்தேகப் படுகிறாய்? அவளுடைய குழந்தை இறந்துவிட்டது; அவள் அங்கே போனால், அந்தக் குழந்தையின் மரணத்துக்குக் காரணம் அவள் தான் என்று குற்றம் சாட்டப்பட்டு, அவள் பயப்படும் ஒரு கிராதகப் புருஷனைத் தான் பார்ப்பாள். அதை அவள் விரும்புவாள் என்று நினைக்கிறாயா? நம் குழந்தைக்குச் செவிலித்தாயாக இங்கு வந்ததன்மூலம் தன் குழந்தையை இழந்துவிட்டதால், எந்தக் குழந்தைக்காகத் தன் குழந்தையைத் தியாகம் செய்தாளோ, அந்தக் குழந்தையோடு இந்த வீட்டில் இருக்க உரிமை இருப்பதாகவே அவள் நினைக்கிறாள். அது சரியாகப் படவில்லையா உனக்கு! அது நியாயமானதாகவும் படவில்லையா?"

அவன் மனைவி அவனோடு பேச அந்த அறைக்கு வருவதற்குச் சற்று முன் அவன் என்ன எழுதிக் கொண்டிருந்தானோ அதையே திருப்பித்திருப்பிச் சொல்லிக் கொண்டிருந்தான். வெகு தொலைவில் சிசிலித்தீவில் இறந்துபோன அந்தக்குழந்தையைப் பற்றி யோசித்துக்கொண்டிருக்கும் போது, ஆசிரியர் மிலான் எழுதிய 'பூரண அபேதவாதம்' என்ற நூலின் ஒரு பகுதி ஞாபகம் வந்தது. கடந்துபோன விஷயம் எதுவானாலும், இன்னும் சில தினங்களில் அபேத வாத சங்கத்தில், தான் செய்ய இருந்த பிரசங்கத்தில் இந்தச் செய்தியைக் குறிப்பிடுவதாக இருந்தான்

எதிர்பார்த்தபடியே இந்தக் காருண்ய வார்த்தைகளையெல்லாம் ஒப்புக்கொள்ளாமல் உடனுக்குடனேயே அன்னிச்சியாவை நீக்கி விடுவது என்ற உறுதியுடன் அந்த அறையை விட்டு வெளியேறினான்.

ஆத்திரத்தால் ஸீனர்மோரி தான் எழுத ஆரம்பித்த பிரசங்கத்தின் பக்கங்களை எடுத்து வீசித் தரையில் எறிந்தான். சில நிமிஷங்கள் கழித்து மூடி இருந்த கதவின் மறுபக்கத்தில் துன்பப்பட்ட அந்தப்பெண் அழுவதும், தன்னைத் தள்ளிவிட வேண்டாம் என்று எஜமானியை மன்றாடிக் கேட்பதுவும் அவன் காதுகளில் விழுந்தது.

"சம்பளம்கூட வேண்டாம். என்னை வேலைக்காரியாக வைத்துக் கொள்ளுங்கள். துண்டுரொட்டி கொடுத்தால்போதும். மிச்சம் மீதிகளை வெளியே எறிவதை என்னிடம் கொடுப்பதே போதும்.

தூங்குவதற்கு வெறும்தரையே போதும். ஐயோ! என்னை வீட்டை விட்டுமட்டும் விரட்டி விடாதீர்கள். நான் அங்கே திரும்பிப்போக முடியாது. எனக்குத் தயை காட்டுங்கள். இரக்கம் காட்டுங்கள். குழந்தையின் பெயரால் மன்ருடிக்கேட்கிறேன். என்னை வெளியே தள்ளினுல் நான் நாசமாகப் போய் விடுவேன், ஸிஞரினே! நான் நாசமாய்ப் போவேன். நான் திரும்பவும் அங்குபோக முடியாது......"

விக்கலும் விம்மலும் கெஞ்சலும் வெகுநேரம் கேட்டது. அப்புறம் சத்தமே இல்லை. எர்சீலியா மனமிளகி அந்தப்பேதைப் பெண் குழந்தையோடு வசிக்கச் சம்மதித்து விட்டாள் என்று அவன் தீர்மானித்துக்கொண்டான்.

சிறிது நேரம் கழித்து ஸீனர் பெலிஸிஸிமோ ராமிசெல்லி அந்த அறைக்குள் நுழைந்தான். வழக்கமாக அவன் காட்டும் தீவிர முகக்குறியைக் காணும். அவன் முகம் சிவந்து கண்கள் பிரகாசமாயிருந்தன.

என்ன அபூர்வமான வெற்றி! ஸீனர் ராமிசெல்லி திருப்தியுடன் கைகளைப் பிசைந்து கொண்டான், அதுவும் வக்கிலின் முன்னிலையில்! அப்போதுதான் வெளியே விரட்டிப்பட்டிருந்த அந்த அழகிய சிசிலிய செவிலித்தாய் அன்றிரவே அவனேடு வந்து தங்கப் போகிருள்! ஆமாம்! செவிலித்தாய் மார்கள் எல்லோரும் கெட்டுப் போனவர்கள்தான். அவர்கள் எல்லோருக்கும் சொந்தம். இந்தப் பெண் புதிசு. ஒரு வேலைக்காரி யாகத்தான் தன்னை அவன் விரும்

பினுன் என்று அவள் நினைத்தாள். ஆமாம். வேலைக் காரியாகத்தான்—ஏன் கூடாது?

"ஸீனர் ராமி செல்வி!"

"என்ன செய்யணும் ஐயா!"

"இவைகளையெல்லாம் நன்ருக, சுத்தமாகக் கைப் பிரதி எடு" என்று சொல்லிக்கொண்டே தன் பிரசங் கத்தை எழுதியிருந்த தாட்களைக் கொடுத்தான்.

பிறகு எழுதிக்கொண்டே போனுன்.

"அபேதவாத அரசாங்க அமைப்பின் கீழ் மக் களிடேயே சமத்துவம் இரண்டுவிதமான அம்சங் களில் கவனிக்கப்படல் வேண்டும். இரண்டாவதாக எல்லா மனிதர்களும் வாழ்க்கைப் போராட்டத்தில் சமமாகப் பங்கெடுத்துக்கொண்டாக வேண்டும். ஒரே மாதிரியான சமூக சமத்துவத்தில் ஒவ்வொருவனும் சுதந்திரத்துடன் முன்னேற முடியும். ஆனுல் தற் காலத்துக்குத் தாட்டிகமாகவும், திடமாகவும் பிறக் கும் குழந்தை ஏழையாக மட்டும் இருந்துவிட்டால் போதும். அது வியாதிக்காரக் குழந்தையாகப் பிறந்து—ஆனுல் பணக்காரனுக இருக்கும் குழந்தை யோடு போட்டி போட்டால் போட்டியால் ஏழைக் குழந்தை செத்தொழியத் தான் வேண்டும்........."

"ஸீனர் ராமி செல்வி!"

"ஸார்!"

"என்ன சமாசாரம்? ஏதேனும் மூளைக்கோளாறு ஏற்பட்டுவிட்டதா? ஏன் இப்படிச் சிரிக்கிருய்?"

# இவர்கள்

ஹாஸ்யச் சித்திரங்கள்

•

பி. ராமச்சந்திரன்

•

அவனன்றிஓரணுவும் அசையாது என்று வேதாந்திகள் கூறுகிருர்கள். ஆனல், இவர்கள் இன்றி இங்கே நகர வாழ்க்கை ஒரு நாளும் நடைபெருது என்று, சமையற்காரன், தோட்டக்காரன், பால்காரன், வேலைக்காரன், வண்டிக்காரன், தையற்காரன், தபால்காரன், முதலியவர்களை, அவர்களுடைய நிஜத்தோற்றத்துடன் நம்முன் கொண்டுவந்து நிறுத்தி, அவர்களைப் பேசவிட்டு, வேடிக்கையாக நகர வாழ்க்கையை அம்பலப்படுத்துகிருர் ஆசிரியர்.

•

ஒவ்வொருவரும் படித்து ஆனந்திக்க
வேண்டிய நூல்.

•

— ஜோதி வெளியீடு —

9